உ

கடவுள் துணை

அநுபவ

# சாமுத்ரீகா லக்ஷண சாஸ்திரம்

இஃது

சமஸ்கிருத பாஷையிலிருந்தும்,

பல பழைய கையேட்டுப் பிரதிகளிலிருந்தும்

தயாரிக்கப்பட்டது.

பதிப்பாளர் :

ஆர். ஜி. பதி கம்பெனி,

ஜி. டி., சென்னை.

உ

கடவுள் துணை

# அநுபவ

# சாமுத்ரீகா லக்ஷண சாஸ்திரம்

## இராஜ லக்ஷணங்கள்

1. மிருதுவான உள்ளங்கைகள் உள்ளங் கால்களும் தாமரைப் புஷ்பத்தின் இதழ்களைப்போலும், விரல்களானது வியர்வை நீரினால் ஒன்றோடொன்று ஒட்டாமலும், தாமரை நிறம்போன்ற நகங்களையும், ஆமையைப்போல் பருத்த வடிவத்தையும், செம்மையாய் அமைக்கப்பட்ட தலையையும், சிவந்த உதடும், கடைவாயும், கண்களும், கண்களின் கடைப் பாகங்களும், நாக்கும், நீண்ட கைகள் அதாவது தொங்கும்பொழுது தன் கைகள் தன் முழங்கால் பொருத்துக்குச் சமீபமாயும் சரியாயுமுள்ள அமைப்புடைய தேகம் அரசர்களுக்குண்டு. தவிரவும் அவர்கள் தொடைகள் யானையின் துதிக்கையைப்போலும், அதில் சில மயிர்கள் உள்ளதாயும் அவர்கள் தொப்புளில் ஒரு மயிரும் இருக்கும். அவர்கள் சமமான பீஜங்களை யுடையவர்களாயு மிருப்பார்கள்.

## சில பொது லக்ஷணங்கள்

1. ஒரு மனிதன் மஞ்சள் நிறமான நகங்களையும், நாகரீகமில்லாத முகத்தையும், பருத்த தலையையும், அவன் பாதங்களின் பெருவிரல்கள் கோணலாயாவது அல்லது இங்கும் அங்கும் பார்க்குமாகில், அவன் விசனமும் தரித்திரமும் உடையவனென் றறிந்துகொள்ள வேண்டியது.

2. கற்றவர்களுக்கும், வேதசாஸ்திரங்களில் தேர்ச்சி யடைந்தவர்களுக்கும் தொடைகளில் இரண்டு மயிர்களிருக்கும்.

3. ஏழைகளுக்கு மூன்று மயிர்களிருக்கும்.

4. ரோகி அல்லது வியாதியஸ்தனுக்கு அவன் முழங்கால் பொருத்துக்களில் சதையில்லாமல் சூன்யமாயிருக்கும்.

5. எவனொருவன் சிறிய உபஸ்தம் அல்லது ஆண் குறியை யுடையவனோ அவன் சந்ததியில்லாத செல்வனாவான்.

6. எவனொருவன் அதிக நீளமான ஆண் குறியை யுடையவனோ அவன் தரித்திரனாவான்.

7. பருதான மணிக்கட்டை யுடையவன் ஏழையாவான்.

8. மங்கலான வெளியின் நிறத்தையுடைய மணிக்கட்டை யுடையவன் சந்தோஷத்தை யடைவான்.

9. எவனொருவன் அதிக சப்தத்தோடு மூத்திரத்தை வெளிப்படுத்துவானோ அவன் தரித்திரனாவான்.

10. எவனொருவன் யாதொரு சப்தமும் இல்லாமல் மூத்திரத்தை வெளிப்படுத்துவானோ அவன் அரசனாவான்.

11. எவனொருவன் சமமான வயிறை யுடையவனா யிருக்கிறானோ அவன் தன வாழ்நாளில் வேறு வேறு விதமான சுகங்களை யனுபவிப்பான்.

12. தாழியைப்போல் வயிறை யுடையவன் கஷ்டத்தை யடைவான்.

13. பாம்புபோல் வளைந்த வயிறை யுடையவன் ஏழையாவான்.

14. எவனொருவன் வயிற்றில் கோடுகள் இருக்கிறதோ அவன் தீர்க்காயுசை யடைவான்.

15. எவனொருவன் நெற்றியில் மூன்று வரைகள் அல்லது கோடுகள் இருக்கிறதோ அவன் சந்ததியோடு சுகமாய் செல்வத்துடன் அறுபது வயதுவரை ஜீவித்திருப்பான்.

16. எவனொருவன் நெற்றியில் ஒரு வரை அல்லது கோடு மட்டும் இருந்து அது காதுவரை சென்றிருக்குமாகில் அவனுக்கு ஆயுள் இருபது வருஷம்.

17. எவனொருவன் நெற்றியில் மூன்று வரைகளுமிருந்து அவ்வரைகள் காதுவரை சென்றிருக்குமாகில் அவன் நூறு வயதுவரை ஜீவித்திருப்பான்.

18. மேலே சொன்னபடி இரண்டு வரைகள் மட்டும் காதுவரை எட்டியிருக்குமாகில், அவன் எழுபது வயதுவரை ஜீவித்திருப்பான்.

19. எவனொருவன் நெற்றியில் இரண்டு கோடுகள் ஒன்று தெளிவாயும், மற்றொன்று தெளிவில்லாமலும் இருக்கிறதோ அவன் இருபது வயதுவரை ஜீவித்திருப்பான்.

20. எவனொருவன் நெற்றியில் தீர்க்கமில்லாத வரைகள் இருக்கிறதோ அவன் நாற்பது வயதுவரை ஜீவித்திருப்பான்.

21. எவனொருவன் நெற்றியில் முறிந்த வரைகள் இருக்கிறதோ அவன் தற்செயலாய் மரணமடைவான்.

## மயிரின் லக்ஷணங்கள்

1. கெட்டியாயும் மிருதுவாயும் உள்ள மயிரையுடையவர்கள் புருஷத்தன்மை யுடையவர்களாயும், சரீரப் பிரகிருதி யுடையவர்களாயும் குளிர்ச்சியுள்ள சரீரத்தை யுடையவர்களாயு மிருப்பார்கள்.

2. மிருதுவாயும் கீழே தொங்கிக்கொண்டிருக்கும் மயிரை யுடையவர்கள் இரத்தபுஷ்டி யுடையவர்களாயும், அது அதிக விரைவாக வளருமானால் அவர்கள் சீதள தேகத்தை விட்டு உஷ்ண தேகத்தை யுடையவர்களுமா யிருப்பார்கள்.

3. அதிக மயிரையுடையவர்கள் எளிதில் கோபித்துக் கொள்பவரா யிருப்பார்கள்.

4. கருப்பு நிறமாயும் சுருள் நிறமாயுமிருக்கிற மயிரை யுடையவர்கள் உஷ்ணமுடையவர்களா யிருப்பார்கள்

5. நேராயும் முடிவில் முள்ளம் பன்றியின் சிறு முள்ளைப் போலுமுள்ள மயிரை யுடையவர்கள் பயத்தை யுடையவர்களாவார்கள்.

6. மழமழப்பானதும் மட்டமானதுமான மயிரை யுடையவர்கள் விஷய விகாரங்களை எளிதில் தெரிந்துகொள்ளக் கூடியவர்களாயும் கண்யமுடையவர்களாயு மிருப்பார்கள்.

7. சுத்தமானதும் மிருதுவானதுமான மயிரை யுடையவர்கள் பலஹீனர்களாயும் நோயாளிகளாயு மிருப்பார்.

## கண் புருவங்கள்
## முடி OR ரெப்பைகளின் லக்ஷணங்கள்

1. கண் புருவத்தின் மேல் நீளமானதாயும், ஒன்றோடொன்று சேர்ந்தும் இருக்கப்பட்ட மயிரை யுடையவர்கள் சாதாரண மனிதர்களாயும், துஷ்டச்செய்கை யற்றவர்களாயு மிருப்பார்கள்.

2. கண்களின் புருவங்கள் இயற்கையாகவே மடிப்பா யிருக்குமாகில் அவன் மரியாதையற்றவனாயும், பொறாமைக்காரனாயும், வாக்குத்தத்தத்தை மறுதளிப்பவனாயு மிருப்பான்.

3. கண்களின் புருவங்கள் குறுகலாயும் ஒழுக்கமாயும் இருக்குமாகில் அவன் நல்ல நடத்தையுடையவனும், நியாயவானும் பழிக்குப்பழி வாங்குபவனாயு மிருப்பான்.

4. எவனொருவன் கண்களின் மேல் முடிகள் அல்லது ரெப்பைகள் குள்ளமாயும் சிறியதாயும் இருக்கிறதோ அவன் இரகசியமுடையவனும், புத்திமானும் குரூரமுள்ளவனும் வழக்குடையவனுமா யிருப்பான்.

5. கண்களின் ரெப்பைகள் கீனமாக யிருக்குமாகில் அவன் சட்டப்பயிற்சி யுடையவனாவான்.

6. அது அதிக மயிரையுடையதா யிருந்தால் அவன் நாட்டுப் புறத்தானென்று அறியவேண்டியது.

7. விசாலமாயும் விரிவாயும் உள்ள புருவங்களையுடையவர்கள் ஏழைகளாவார்கள்.

8. கீனமாயும் ஒன்றோடொன்று பொருந்தாமலும் இருக்கிற புருவங்கள் செல்வவான்களுக்குண்டு.

9. அறைச்சந்திரனைப் போன்ற புருவங்களை யுடையவர்கள் செல்வவானாவார்கள்.

10. இரண்டு புருவங்களுக்கும் மத்தியில் வெட்டுடையவர்கள் ஏழைகளாவார்கள்.

11. அமுக்கப்பட்ட புருவங்களை யுடையவர்கள் ஸ்திரீகளுக்குப் பிரயோஜனமற்றவர்களா யிருப்பார்கள்.

## கண்களின் லக்ஷணங்கள்

1. அதிகமாக பெரிய கண்களையுடையவர்கள் சோம்பேறிகளாகவும், தைரியமுள்ளவர்களாகவும், பொய் சொல்லுபவர்களாகவும், நாட்டுப்புறத்தார்களாகவும், கடவுளிடத்தில் பக்தியற்றவர்களாயுமிருப்பார்கள்.

2. ஆழமான கண்களையுடையவர்கள் பெரிய மனதை யுடையவர்களாயும் சந்தேகிகளாயு மிருப்பார்கள்.

3. கூர்மையும் நீளமுமான கண்களையும், சாய்ந்த கண் ரெப்பைகளையு முடையவர்கள் போக்கிரிகளாகவும் நியாயச்சட்டம் தெரியாத ஜனங்களுடன் சேருபவர்களாயும் இருப்பார்கள்.

4. கோவேறு கழுதையைப்போன்ற சிறிய கண்களையுடையவர்கள் விரைவில் அறிந்துகொள்ளக் கூடிய சக்தியற்றவர்களாயும் மற்றவர்கள் சொல்வதையெல்லாம் நம்புகிறவர்களாயு மிருப்பார்கள்.

5. கற்றுணர்ந்தவர்கள் சிவந்த தாமரை யிதழ்போன்ற கண்களை யுடையவர்களாவார்கள்.

6. அதிர்ஷ்டசாலிகளா யிருப்பவர்கள் கண்கள் கருப்பும் நீலமும் கலந்த நிறமாயிருக்கும்.

7. தாமரை யிதழ்போலும் மூலைகளில் வளைவாயும் உள்ள கண்களையுடையவர்கள் வாழ்நாளில் சகலவித இன்பங்களையு மடைவார்கள்.

8. பூனையின் கண்களைப் போன்றவர்கள் பாவமுடையவராவார்கள்.

9. யானையின் கண்களைப் போன்றவர்கள் யுத்தவீரர்களாவார்கள்.

10. விசேஷமான சித்திரம்போன்ற கண்கள் அரசர்களுக்குண்டு.

11. உருண்டை வடிவமான கண்களையுடையவர்கள் பாபிகளாவார்கள்.

12. பார்வை குறைவாயிருக்கிற கண்கள் தரித்திரர்களுக்குண்டு.

## மூக்கின் லக்ஷணங்கள்

1. பெரிய மூக்கையுடையவர்கள் சுத்த பொய்யர்களாயும், கலகக்காரர்களாயும், பெரிய வேசிக்கள்ளர்களாயு மிருப்பார்கள்.

2. பெரியதாயும் நீளமாயும் கீழே தொங்கிக்கொண்டிருக்கிற மூக்கையுடையவர்கள் நல்ல விஷயங்களில் பேராசை யுடையவர்களாயும், சாதாரண மனதை யுடையவர்களாயும் தாங்கள் செய்கிற நன்மை தின்மையான காரியங்களில் ரகசியமும் விவேகமும் உள்ளவர்களாயும், மற்றவர்கள் செய்யும் காரியங்களைப் பரிகாசம் செய்பவர்களாயு மிருப்பார்கள்.

3. பொருத்தமாய் பெரிதாயிருக்கிற மூக்கையுடையவர்கள் உற்சாகமுள்ளவர்களாயும் தைரியமுள்ளவர்களாயும் எப்போதும் பல விஷயங்களில் ஆசையுள்ளவர்களாயு மிருப்பார்கள்.

4. வட்டவடிவமான மூக்கின் முனையின்மேல் புள்ளிகளிருக்குமாகில் அவர்கள் பேராசையானவர்களாயும் கர்வமுள்ளவர்களாயும் விசுவாசமுள்ளவர்களாயும் வீணர்களாயு மிருப்பார்கள்.

5. மேலே சொல்லப்பட்ட குறிகள் ஒரு ஸ்திரீக்கு இருக்குமாகில் அவள் துஷ்டச்செய்கை யுடையவளாயும் விபசாரத்தனமுடையவளாயு மிருப்பாள்.

6. மூக்கின் முனையிலாவது அதன் மேல்பாகத்திலாவது மயிரையுடையவர்கள் எப்போதும் சாதாரண மனதை யுடையவர்களா யிருப்பார்கள்.

7. வட்டவடிவமாயும் நீளமாயும் இன்பமான முகச் சாயலையுமுடைய மூக்கு ஒரு ஸ்திரீக்கு இருக்குமாகில் அவள் புத்திசாலியாயும் கெட்டிக்காரியாயும் பதிவிரதையாயு மிருப்பாள்.

8. கிளியைப்போன்ற மூக்கையுடையவர்கள் சந்தோஷத்தை யடைவார்கள்.

9. இலேசான மூக்கையுடையவர்கள் அல்லது தடிப்ப மில்லாத மூக்கையுடையவர்கள் நீண்டகாலம் ஜீவித்திருப்பார்கள்.

10. கிளைத்தாற்போன்றும் மூக்கின் முனை உடைந்தும் இருக்குமாகில் அவன் ஸ்திரீகளுக்குப் பிரயோஜனமற்றவனென்று தெரிந்துகொள்ள வேண்டியது.

11. நீண்ட மூக்கையுடையவர்கள் நல்ல அதிர்ஷ்டமுடையவராவார்கள்.

12. தட்டையான மூக்கையுடையவர்கள் திருடர்களாயும் துர் அதிர்ஷ்டசாலிகளாயும் இருப்பார்கள்.

13. நேராயும் அழகிய முனையுடன் சிறிய நாசித் துவாரங்களும் உள்ள மூக்கு அரசர்களுக்குண்டு.

14. சதை பிடித்துள்ள மூக்கு மந்திரிகளுக்குண்டு.

## உதடு பற்கள் முதலியவைகளின் லக்ஷணங்கள்

1. சிவப்பு நிறமான உதடுகள் இராஜவம்சத்தவர்களுக்குண்டு.

2. மெருபன்னமான உதடுகள் தரித்திரர்களுக்குண்டு.

3. கெட்டியாயும் சிறியதாயும் பற்கள் இருப்பது ரொம்பவும் சிலாக்கியம்.

4. கூர்மையாயும் சமனாயும் பற்கள் இருக்குமாகில் அதுவும் சிலாக்கியந்தான்.

5. நாக்கு நீளமாயிருப்பது மேன்மை.

6. நாக்கு நீலவர்ணமா யிருக்குமாகில் அதுவும் அதிக மேன்மை.

7. அது வெள்ளை தகடு போன்ற நிறமுடையதா யிருந்தால் அவன் திரவிய நாசம் செய்பவனாவான்.

## காதுகளின் லக்ஷணங்கள்

1. விசாலமானதும் பெரிதும் அகலமுமான காதுகளையுடையவர்கள் தன்மை யறிந்துகொள்ளும் சக்தியற்றவர்களாயும் சோம்பேறிகளாயும் ஞாபகசக்தி யற்றவர்களாயு மிருப்பார்கள்.

2. சிறிய காதுகளையுடையவர்கள் நல்ல தன்மையறியக் கூடியவராவார்கள்.

3. செம்மையான பொருத்தமுடைய காதுகளையுடையவர்கள் புத்திசாலிகளாகவும் ஜாக்கிரதையுள்ளவர்களாகவும் சத்தியவந்தர்களாகவும் தைரியசாலிகளாகவும் இருப்பார்கள்.

4. கொஞ்சம் நீளமான காதையுடையவர்கள் தைரியசாலிகளாகவும் காரணமில்லாதவர்களாயும் பெருத்தீனி தின்பவர்களாகவும் இருப்பார்கள்.

5. குட்டையான காதுகள் லோபியர்களுக்குண்டு.

6. வல்லயம்போன்ற காதுகள் அரசர்களுக்குண்டு.

7. பெரிய காதுகள் பிரபுக்களுக்கும் இராஜாக்களுக்கும் உண்டு.

8. காதுகளில் மயிரையுடையவர்கள் அற்பாயுசுடையவராவார்கள்.

## வாயின் லக்ஷணங்கள்

1. பெரியதாயும் அகலமாயும் உள்ள வாயையுடையவர்கள் வெட்கங் கெட்டவர்களாயும் மதிலேப்பேச்சை யுடையவர்களாயும் பொய்யர்களாயும் நிர்மூடர்களாயும் நாணங்கெட்ட தைரியத்தை யுடையவர்களாயும் துரோகிகளாயு மிருப்பார்கள்.

2. சிறிய வாயையுடைய ஒரு ஸ்திரீயாவது மனிதனாவது அமரிக்கையும் விசுவாசமும் பயமும் வாக்கு சாட்டியமும் ஞானமும் படிப்பும் உடையவர்களாவார்கள். ஆனால் அப்படிப்பட்டவர்கள் அதிக போஜனமருந்தமாட்டார்கள்.

3. கெட்டியான உதட்டையுடையவர்கள் புத்திசாலிகளைவிட சற்று சாதாரணமானவர்களாயும் மற்றவர்கள் சொல்லக்கூடியவைகளை யெல்லாம் நம்புபவர்களாயு மிருப்பார்கள்.

4. மிருதுவாயும் கொஞ்சம் கெட்டியாயுமுள்ள உதடுகளை யுடையவர்களும் சிறியதாயும் லேசானதாயுமுள்ள உதடுகளையுடையவர்களும் அதிக பேச்சு பேசுபவர்களாயும் ஞானமுள்ளவர்களாயும் எதையும் எளிதில் அறிந்துகொள்பவர்களாயு மிருப்பார்கள்.

5. செம்மையான நிறத்தையுடைய உதடுகளையுடையவர்களும் கொஞ்சம் கெட்டியான உதடுகளையுடையவர்களும் விசுவாச

முள்ளவர்களாயும் கீர்த்தியுள்ளவர்களாயும் துஷ்டகுணங்களை விட்டு விட்டவர்களாயு மிருப்பார்கள்.

6. ஒரு உதட்டை விட மற்றொரு உதடு நெட்டையா யுள்ளவர்கள் சந்ததிகளை இரக்ஷிப்பதில் நிதானமுள்ளவர்களாயும் பேதைகளாயும் தங்கள் அறிவை விளையாட்டுத்தனமாக உபயோகப்படுத்துபவர்களாயு மிருப்பார்கள்.

## மீசை தாடிகளின் லக்ஷணங்கள்

1. லேசாயும் மிருதுவாயுமுள்ள மீசை தாடியுடையவர்கள் காயமுள்ளவர்களா யிருப்பார்கள்.

2. தவிர அவர்கள் மெல்லிய சரீரத்தையுடையவர்களையும் உறுதியுள்ளவர்களையும் பார்த்தவர்களாயு மிருப்பார்கள்.

3. போதுமான நெட்டையானதும் செந்நிறமானதுமான மீசை தாடியுடையவர்கள் நல்ல குணமுள்ளவர்களாயும் சகல காரியங்களிலும் நியாயவான்களாயும் இருப்பார்கள்.

4. மீசை யில்லாதவர்களும் சிறிய மீசையுடையவர்களும் பொதுவாய் கெட்ட நடத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

5. அழகாயும் லேசாயும் மிருதுவாயும் உடைய தாடி மீசை உள்ளவர்கள் வாழ்நாளில் சகல இன்பங்களையும் அனுபவிப்பார்கள்.

6. திருடனுடைய மீசையும் தாடியும் நெட்டையாயும் குட்டையாயும் செம்புவர்ணமாயு மிருக்கும்

## மோவாயின் லக்ஷணங்கள்

1. நீளமாயும் சங்கிலியைப் போலும் உள்ள மோவாய் விசேஷமாய் ஒரு ஸ்திரீக்கு இருக்குமானால் அவள் தான் அதிர்ஷ்டமுடையவளாயும், வாக்குசன் செல்லாதவளாயு மிருப்பாள்.

2. அது ஒரு ஆண்மகனுக்கு இருக்குமாகில் அவன் மரியாதை யற்றவனும், யாதொரு சங்கதியையும் ரகசியமாய் மனதில் வைக்கத் திறமையற்றவனையும், உடனே எவ்வித சங்கதியானாலும் அது மற்றவர்களுக்கு கெடுதலை செய்யக் கூடியதா யிருந்தாலும் அதை வெளி விடும் வரை [illegible] மனதானது சமாதானமாகாதவனும் இருப்பான்.

3. சிறிய மோவாயை உடையவர்கள் பொறுமையும் கெட்ட எண்ணமுமுடையவர்களா யிருப்பார்கள்.

4. நீளமாயும் உருண்டை வடிவமாயும் உள்ள மோவாயை யுடையவர்கள் ஆண்தன்மை யுடையவர்களல்ல. ஆனால் பெண் தன்மை யுடையவர்களாவார்கள். இருந்தபோதிலும் அவர்கள் தைரிய முடையவர்களாயும் கர்வமுடையவர்களாயு மிருப்பார்கள்.

5. சதுரமான மோவாயை யுடையவர்கள் அதிக தைரிய சாலிகளாகவும் தேக பலமுடையவர்களாயும் இருப்பார்கள்.

6. சுருக்கான அல்லது மடிப்புள்ள மோவாயையுடையவர்கள் ஆண் சக்தி யில்லாதவர்களாயும் பலஹீனர்களாயும் இருப்பார்கள்.

7. கூர்ந்த மோவாயை யுடையவர்கள் துர் அகங்காரமுள்ளவர்களாயும் துரோஹிகளாயும் தன்னைச் சேர்ந்தவர்கள் செய்யும் காரியாதிகளில் முதன்மையானவர்களா யிருக்கவேண்டுமென்றெண்ணுபவர்களாயும் தன் அயலார்களுக்கெல்லாம் விரோதிகளாயு மிருப்பார்கள்.

8. அது ஒரு ஸ்திரீக்கு இருக்குமாகில் அவள் குரூர முடையவளும் மற்றவர்களிடத்தில் பொறுமை யுடையவளாயும் தன் குழந்தைகளிடத்திலும் கூட பிரியமற்றவளாயு மிருப்பாள்.

9. இளைத்த மோவாயை யுடையவர்கள் தரித்திரர்களாவார்கள்.

10. சுழையைப் பிடித்தமுள்ள மேவாயையுடையவர்கள் செல்வ வானவர்கள்.

## முகத்தின் லக்ஷணங்கள்

1. அதிகமான சதைபிடித்தமுள்ள முகத்தை யுடையவர்கள் பயமுடையவர்களாயும் உதாரண குணமுடையவர்களாயும் இன்பங்களை யனுபவிக்கக்கூடியவர்களாயும் மற்றவர்களிடத்தில் விசுவாசமுடையவர்களாயும் செர்வமுடையவர்களாயும் தாங்கள் நினைக்கும் காரியங்களையடைய அதிர்ஷ்டபாக்கிய முடையவர்களாயு மிருப்பார்கள்.

2. உருண்டை வடிவமான முகத்தை யுடையவர்கள் நற்செய்கைகளை நிரூபிக்கும் புத்திமான்களாயும் சில சமயங்களில் குரூரமுள்ளவர்களாயு மிருப்பார்கள்.

3. சிறியதாயும் உருண்டை வடிவமாயுள்ள முகத்தை யுடையவர்கள் பலமில்லாத சாதாரண மனிதர்களாயும் ஞாபகசக்தியற்றவர்களாயு மிருப்பார்கள்.

4. நீளமான முகத்தை யுடையவர்கள் தங்கள் பேச்சுக்களிலும் செய்கைகளிலும் ஸ்துதி செய்பவர்களாயும் தர்மவான்களாயும் கெடுதல் எண்ணம் உடையவர்களாயும் போகங்களில் பிரியமுடையவர்களாயு மிருப்பார்கள்.

5. கெட்டியாயும் அகலமாயுமுடைய முகத்தையுடையவர்கள் வேசிமக்களா யிருப்பார்கள்.

6. வெளுத்த நிறமுடைய முகத்தையுடையவர்கள் திரேக சௌக்கிய மில்லாதவர்களாயும், விஷயங்களை ஞாபகத்தில் பதியத்தக்க குணம் உடையவர்களாயு மிருப்பார்கள்.

7. சுத்தமாயும் மிருதுவாயும் உள்ள முகம் இராஜ வம்சத்தவர்களுக்கும் பிரபுக்களுக்குமுண்டு.

8. விகாரமாயும் மிருதுவாயிராமலும் உள்ள முகம் தரித்திரர்களுக்குண்டு.

9. ஒரு குழந்தை தன் தாயைப்போல் முகம் உடையவனா யிருப்பானாகில் அவன் அதிக கஷ்டங்களையடைவான்.

10. உருண்டை வடிவமான முகம் செல்வவான்களுக்கு முண்டு.

11. கெட்டையான முகம் ஏழைகளுக்குமுண்டு.

12. துஷ்டர்கள் கோணையான முகத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

13. அமுக்கப்பட்ட முகத்தையுடையவர்கள் புத்திரர்களில் லாதவராவார்கள்.

14. லோபிகளுக்கு முகம் குட்டையாயிருக்கும்.

## நெற்றியின் லக்ஷணங்கள்

1. விசாலமாயும் உயரமாயும் சங்கிதழ்போலும் மேடுமோடு மான நெற்றி தரித்திரர்களுக்குண்டு.

2. அரைசந்திரனைப்போன்ற நெற்றி செல்வவான்களுக் குண்டு.

3. விசாலமான நெற்றியுடையவர்கள் ஆசான்களாவார் கள்.

4. தலைப்புஷ்டியான நெற்றியுடையவர்கள் பாவிகளா வார்கள்.

5. உயரமாயும் முக்கோண வடிவுள்ள நெற்றியையுடை யவர்களிடத்தில் திரவியம் இருக்கும்.

6. உருண்டை வடிவமான நெற்றி லோபியர்களுக் குண்டு.

7. உன்னதமான நெற்றி அரசர்களுக்குண்டு.

8. வியர்வையில்லாமலும் உலர்ந்து முன்ன நெற்றி யுடையவர்கள் நல்ல சகுணமுடையவர்களல்ல.

9. போதுமான வியர்வையுடன் நெருக்கம் மேடு பள்ள முன்ன நெற்றியுடையவர்கள் சந்தோஷத்தை யனுபவிப்பார்கள்.

10. லலிதமாயும் விசாலமாயும் உடைய நெற்றி வைத் தியக்காரர்களுக்குண்டு.

## கக்ஷங்களின் லக்ஷணங்கள்

1. தோற்றத்துக்கு மாத்திரம் நியாயமாயுள்ள அல்லது வெளிக்குமாத்திரம் சரியாயிருக்கிற கக்ஷங்களையுடைய மனிதர்கள் தரித்திரராவார்கள்.

2. சமமான கக்ஷங்களையுடையவர்கள் வாழ்நாளில் பலவித மான எண்ணங்களையும் அநுபவிப்பார்கள்.

3. பொந்துபோன்ற கக்ஷங்களையுடையவர்கள் செல்வத்தை யும் ஆஸ்தியையுமடைவார்கள்.

4. உன்னதமானதும் மேடுபள்ளமுள்ள அல்லது வளைந்த கக்ஷங்களையுடையவர்கள் அரசர்களாவார்கள்.

## கொப்புளின் லக்ஷணங்கள்

1. மீனைப்போன்ற கொப்புளையும் வயிறையுமுடையவர்கள் சந்தோஷத்தையடைவார்கள்.

2. விசாலமான அல்லது தாழ்ந்த கொப்புளையுடையவர்கள் கஷயாத்திலாவது அல்லது அபாய மரணமாவது அடைவார்கள்.

3. கொப்புளுக்குள் ஒருபக்கமாக மடிப்பு இருக்குமாகில் அவன் நீண்ட காலம் ஜீவித்திருப்பான்.

4. அதற்குள் விஷ்ணுமண்டலம் அல்லது சூடாமண்டலம் போலிருக்குமாகில் அவன் செல்வத்தையுடையவனாவான்.

5. அது கீழ்நோக்கி இருக்குமாகில் அவன் ராஜயோகமடைவான்.

6. அது தாமரைப் புஷ்பத்திற்குள்ளிருக்கும் விதையின் மேல் தோலைப்போலிருக்குமாகில் அவன் அரசனாவான்.

7. அதில் ஒரு மடிப்பு மாத்திரம் இருக்குமாகில் அவனுக்கு ஆயுள் நூறு வருஷம்.

8. அதில் இரண்டு மடிப்பு இருக்குமாகில் அவன் செல்வத்துடன் வாழ்வான்.

9. அதில் மூன்று மடிப்புகள் இருக்குமாகில் அவன் ஒரு குருவாயாவது உபாத்தியாயனாயாவது போதனாசிரியனாயாவது இருப்பான்.

10. விரிவாயும் உன்னதமாயுமுள்ள கொப்புள் ஏழைகளுக்குண்டு.

11. உன்னதமான கொப்புளையுடையவர்கள் அற்பாயுளையடைவார்கள்.

12. கொப்புளுக்குள்ளிருக்கும் மடிப்பு நேராயிருக்குமாகில் அவன் சந்தோஷத்தை யடைவான்.

13. அதற்குள்ளிருக்கும் மடிப்பு தூரமாயிருக்குமானால் அவன் ஸ்திரீகளுக்கு பிரயோஜனமற்றவனென்று தெரிந்துகொள்ள வேண்டியது.

14. எவனொருவன் மிருதுவான சதை பிடித்துள்ள சரியான வக்ஷணங்களையும் அவைகளின் வலது பக்கத்தில் அணிவரிசையான மயிர்களையும் உடையவனோ அவன் அரசனாவான்.

15. மேலே சொல்லப்பட்ட மயிர்கள் மேலே சொல்லப்பட்ட இடத்தில் எதிர்நோக்கிப் பார்க்குமாகில் அவன் எண்ணங்கள் ஒன்றும் பிரயோஜனமாகமாட்டாது.

16. உயரமில்லாத மூலைக்காம்பையுடைய ஒருவன் அதிர்ஷ்ட சாலியாவான்.

17. உயரமாயும் சமனில்லாமல் மஞ்சள் நிறமாயும் உள்ள மூலைக்காம்பை யுடையவர்கள் தரித்திரராவார்கள்.

## மார்பின் லக்ஷணங்கள்

1. உன்னதமாயும் சதைப்பிடித்ததோடு நடுக்கமும் அதிர்ச்சியு மில்லாத மார்பையுடையவர்கள் அரசராவார்கள். இன்னும் அவர்கள் சாம்புமயமான சதைப்பிடித்துள்ள பலமான மயிர்கள் கீழ் நோக்கப்பட்டதாயும் இருப்பார்கள்.

2. ஒரு தனவந்தன் சமமான மார்பையுடையவனா யிருப்பான்.

3. இலந்தைப் பழத்தைப்போல் மார்பையுடைய ஒருவன் அதிக சக்தியுடையவனா யிருப்பான்.

4. சமனில்லாத மார்பையுடையவர்கள் தரித்திரர்களாயும் ஆயுதங்களால் கொல்லப்படுபவர்களாயு மிருப்பார்கள்.

## மார்புக்கு மேல்பாகத்திலுள்ள பூணூரவெலும்பின் லக்ஷணங்கள்

1. மேடு பள்ளமும் காடுமூடுமான காறை எலும்பை யுடையவர்கள் தரித்திரர்களாவார்கள்.

2. உன்னதமான காறை எலும்பை யுடையவர்கள் வாழ் நாளில் பலவிதமான எண்ணங்களை அனுபவிப்பார்கள்.

3. இலந்தைப் பழத்தைப் போலுடையவர்கள் செல்வரா னாவார்கள்.

4. தாழ்ந்த காறையெலும்பை யுடையவர்கள் தரித்திராவார்கள்.

## கழுத்தின் லக்ஷணங்கள்

1. தட்டையான கழுத்தையுடையவர்கள் தரித்திரர்களாவார்கள்.

2. மானைப்போன்ற கழுத்தையுடையவர்கள் பக்தி மார்க்கமான வேத நூல்களை எழுதுபவராவார்கள்.

3. சங்கிதழ்போன்ற கழுத்தையுடையவர்கள் அரசர்களாவார்கள்.

4. நீண்ட கழுத்தையுடையவர்கள் அதிக பசியுள்ளவர்களும் பெருந்தீனி தின்பவர்களுமா யிருப்பார்கள்.

5. அமுக்கப்பட்ட கழுத்தையுடையவர்கள் தரித்திரர்களாவார்கள்.

## முதுகின் லக்ஷணங்கள்

1. மயிரில்லாமல் சமமான முதுகையுடையவர்கள் அநுகூலமான குறியையுடையவர்கள் என்றெண்ணவேண்டியது.

2. சமனில்லாததும் வேறுவிதமான முதுகையுமுடையவர்கள் பிரதிகூலக்குறி என்றெண்ணவேண்டியது.

## கைகளின் லக்ஷணங்கள்

1. சதைப்பிடித்ததோடு செம்மையாய் அமைக்கப்பட்டதும் செம்மையான பொருத்துக்களையுமுடைய கைகளையுடையவர்கள் சுபமான குறியையுடையவர்கள் என்று அறிந்து கொள்ள வேண்டியது.

2. வட்டமாயும் செம்மையான சதைப்பிடித்ததோடும் முழங்கால்வரை நீண்டுகொண்டிருக்கும் கைகளையுடையவர்கள் அரசர்களாவார்கள்.

3. குட்டையான மயிர் முளைத்த கைகளையுடையவர்கள் தரித்திரராவார்கள்.

4. யானையின் துதிக்கையைப்போன்ற கைகளையுடைத்தா யிருப்பது ரொம்பவும் சிலாக்கியம்.

## கைகளின் லக்ஷணங்கள்

1. யாதொரு மனிதனுடைய கைகள் சீனமாயும், தடிப்பமாயு மிருக்கிறதோ அவன் சோம்பேரியாயும், கோழை மனதுடையவனு யும், சாதாரண மனிதனாயுமிருப்பான்.

2. யாதொரு மனிதனுடைய உள்ளங்கையானது நீளமாயும் விரல்கள் செம்மையாய் அமைக்கப்பட்டும், மிருதுவாயும் கொஞ்சம் கெட்டியாயுமிருக்குமாகில் அவன் சமத்கார முள்ளவனாயும், ஸ்திரமில்லாத அஷ்டத்தனத்துக்கும் திருட்டுக்கும் உடந்தையாக யிருப்பவனுவான்.

3. யாதொரு மனிதனுடைய உள்ளங்கையானது குழியாயும் பொருத்துக்களில் செம்மையான முடிச்சும் இருக்குமாகில் அவன் நீண்டகாலம் ஜீவித்திருப்பான். ஆனால் அது அளவுக்கு மிஞ்சிய அதிக குழியா யிருக்குமாகில் அவன் அற்பாயுளை யடைவான்.

4. யாதொரு மனிதனுடைய கைகள் அதிக குட்டையாயும் தடிப்பமாயும் முடிவில் அதிக சதைப்பிடிப்புமாயும் இருக்கிறதோ அவன் திருடனாயும், பொய் சொல்லுபவனாயும் நிஜமான அஷ்ட னாயு மிருப்பான்.

5. யாதொரு மனிதனுடைய உள்ளங்கைகள் அளவுக்கு மிஞ்சின நீளமுள்ளதாயும் விரல்கள் தடிப்பமாகவும் இருக்குமாகில் அவன் கெர்வமுடையவனாயும், சோம்பேரியாயும், அஜாக்கிரதை யுள்ளவனுமா யிருப்பான்.

6. பெரியதாயும் நீளமாயும் உள்ள கைகளையுடையவர்கள் ஊக்கமுடையவர்களாயும் நல்ல நிலைமையுடையவர்களாயும் த

இரசாலிகளாயும் வியர்யச்சபையரோடு சேருபவர்களாயும் தங்கள் சிநேகிதர்களிடத்தில் விசுவாசமுடையவர்களாயு மிருப்பார்கள்.

7. யாதொரு மனிதனுடைய கைகள் அளவுக்கு குறைவான குட்டையா யிருக்கிறதோ அவன் அதிகபேச்சு பேசுபவனும், பெருந்தீனி தின்பவனும், மற்றவர்கள் காரியங்களை நாஷிப்பவனுமா யிருப்பான்.

8. யாதொரு மனிதனுடைய கையின் சிறுவிரலின் முனையானது அவன் மோதிர விரலின் மூன்றாவது பொருத்துக்கு துக்கு சமீபமாய் இருக்கிறதோ அவன் தன் குடும்பத்தை செம்மையாய் நடத்துபவனாய் இருப்பான். தவிர அவன் மனைவி அவனுக்கு கீழ்ப்படிந்து நடப்பவளாயும், அவனை சந்தோஷப்படுத்துவளாயு மிருப்பாள்.

9. மேலே சொன்ன சிறுவிரலின் முனை மேலே சொன்னபடி சமனில்லாமல் குறுகலா யிருக்குமாகில் அவன் மனைவி கலக்கக்காரியா யிருப்பாள்.

10. யாதொரு மனிதனுடைய முதல் விரல் அல்லது ஆள்காட்டி விரலானது இரண்டாவது அல்லது பாம்புவிரல் அவ்வளவு நீளமுள்ளதா யிருந்தால் அவன் கர்வமுடையவனும் விசேஷ போகப்பிரியமுள்ளவனும் இருப்பான்.

11. ஆனால் இவ்விரல் பாம்பு விரலைவிட சிறியதாயிருக்குமானால் அவன் கொடூரமும் கோபமுமுள்ளவனா யிருப்பான்.

12. பாம்பு விரல் அல்லது நடுவிரலின் தலைப்பாகம் கூர்மையா யிருக்குமாகில் அவன் அதிக உஷ்ணமுடையவனா யிருப்பான்.

13. இவ்விரல் கோணலாக வளைந்து இருக்குமாகில் அவன் கொலைபாதகனாவான்.

14. மூன்றாவது அல்லது மோதிர விரலானது ஆள்காட்டி விரல் அவ்வளவு நீளமுடையதா யிருந்தால் அவன் வித்தைகளில் தேர்ச்சியுடையவனும் பணக்காரனுயு மிருப்பான்.

10. சதைப் பிடித்தமுள்ள மோவாயையுடையவர்கள் செல்வவானுவார்கள்.

## முகத்தின் லக்ஷணங்கள்

1. அதிகமான சதைபிடித்தமுள்ள முகத்தையுடையவர்கள் பயமுடையவர்களாயும் உதாரகுணமுடையவர்களாயும் இன்பங்களை யனுபவிக்கக்கூடியவர்களாயும் மற்றவர்களிடத்தில் விசுவாசமுடையவர்களாயும் செல்வமுடையவர்களாயும் தாங்கள் நினைக்கும் காரியங்களையடைய அர்ப்பாக்கிய முடையவர்களாயு மிருப்பார்கள்.

2. உருண்டை வடிவமான முகத்தை யுடையவர்கள் நற்செய்கைகளை கிரஹிக்கும் புத்திமான்களாயும் சில சமயங்களில் குரூரமுள்ளவர்களாயு மிருப்பார்கள்.

3. சிறியதாயும் உருண்டை வடிவமாயுள்ள முகத்தை யுடையவர்கள் பலமில்லாத சாதாரண மனிதர்களாயும் ஞாபகசக்தியற்றவர்களாயு மிருப்பார்கள்.

4. நீளமான முகத்தை யுடையவர்கள் தங்கள் பேச்சுக்களிலும் செய்கைகளிலும் ஸ்துதி செய்பவர்களாயும் தர்மவான்களாயும் கெடுதல் எண்ணம் உடையவர்களாயும் போகங்களில் பிரியமுடையவர்களாயு மிருப்பார்கள்.

5. கெட்டியாயும் அகலமாயுமுடைய முகத்தையுடையவர்கள் வேசிமக்களா யிருப்பார்கள்.

6. வெளுத்த நிறமுடைய முகத்தையுடையவர்கள் தேக சௌக்கிய மில்லாதவர்களாயும், விஷயங்களை ஞாபகத்தில் பதியத்தக்க குணம் உடையவர்களாயு மிருப்பார்கள்.

7. சுத்தமாயும் மிருதுவாயும் உள்ள முகம் இராஜ வம்சத்தவர்களுக்கும் பிரபுக்களுக்குமுண்டு.

8. விகாரமாயும் மிருதுவாயிராமலும் உள்ள முகம் தரித்திரர்களுக்குண்டு.

9. ஒரு குழந்தை தன் தாயைப்போல் முகம் உடையவனு யிருப்பானுகில் அவன் அதிக கஷ்டங்களை யடைவான்.

10. உருண்டை வடிவமான முகம் செல்வவான்களுக்கு முண்டு.

11. கெட்டையான முகம் ஏழைகளுக்குமுண்டு.

12. துஷ்டர்கள் கோழையான முகத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

13. அமுக்கப்பட்ட முகத்தையுடையவர்கள் புத்திரர்களில் லாதவர்களாவார்கள்.

14. லோபிகளுக்கு முகம் குட்டையா யிருக்கும்.

## நெற்றியின் லக்ஷணங்கள்

1. விசாலமாயும் உயரமாயும் சந்திரன்போலும் காடுமாடு மான நெற்றி தரித்திரர்களுக்குண்டு.

2. அரைச்சந்திரனைப்போன்ற நெற்றி செல்வவான்களுக் குண்டு.

3. விசாலமான நெற்றியுடையவர்கள் ஆசான்களாவார் கள்.

4. தசைப்புஷ்டியான நெற்றியுடையவர்கள் பாவிகளா வார்கள்.

5. உயரமாயும் முக்கோண வடிவுள்ள நெற்றியையுடை யவர்களிடத்தில் திரவியம் இருக்கும்.

6. உருண்டை வடிவமான நெற்றி லோபியர்களுக் குண்டு.

7. உன்னதமான நெற்றி அரசர்களுக்குண்டு.

8. வியர்வையில்லாமலும் உலர்ந்த முன்ன நெற்றி யுடையவர்கள் நல்ல சகுணமுடையவர்களல்ல.

9. போதுமான வியர்வையுடன் நெருக்கம் மேடு பள்ள முள்ள நெற்றியுடையவர்கள் சந்தோஷத்தை யனுபவிப்பார்கள்.

10. லலிதமாயும் விசாலமாயும் உடைய நெற்றி வைத் தியக்காரர்களுக்குண்டு.

## கஷ்கங்களின் லக்ஷணங்கள்

1. தோற்றத்துக்கு மாத்திரம் பிரயாயமாயுள்ள அல்லது வெளிக்குமாத்திரம் சரியாயிருக்கிற கஷ்கங்களையுடைய மனிதர்கள் தரித்திரராவார்கள்.

2. சமமான கஷ்கங்களையுடையவர்கள் வாழ்நாளில் பலவித மான எண்ணங்களையும் அநுபவிப்பார்கள்.

3. பொங்குபோன்ற கஷ்கங்களையுடையவர்கள் செல்வத்தை யும் ஆஸ்தியையுமடைவார்கள்.

4. உன்னதமானதும் மேடுபள்ளமுள்ள அல்லது வளைந்த கஷ்கங்களையுடையவர்கள் அரசர்களாவார்கள்.

## கொப்புளின் லக்ஷணங்கள்

1. மீனைப்போன்ற கொப்புளையும் வயிறையுமுடையவர்கள் சந்தோஷத்தையடைவார்கள்.

2. விசாலமான அல்லது தாழ்ந்த கொப்புளையுடையவர்கள் கழுமாத்திலாவது அல்லது அபாய மரணமாவது அடைவார்கள்.

3. கொப்புளுக்குள் ஒருபக்கமாக மடிப்பு இருக்குமாகில் அவன் நீண்ட காலம் ஜீவித்திருப்பான்.

4. அதற்குள் விஷ்ணு மண்டலம் அல்லது சூடிமண்டலம் போலிருக்குமாகில் அவன் செல்வத்தையுடையவனாவான்.

5. அது கிழ்நோக்கி இருக்குமாகில் அவன் ராஜயோகமடைவான்.

6. அது தாமரைப் புஷ்பத்துக்குள்ளிருக்கும் விதையின் மேல் தோலைப்போலிருக்குமாகில் அவன் அரசனாவான்.

7. அதில் ஒரு மடிப்பு மாத்திரம் இருக்குமாகில் அவனுக்கு ஆயுள் நூறு வருஷம்.

8. அதில் இரண்டு மடிப்பு இருக்குமாகில் அவன் செல்வத்துடன் வாழ்வான்.

9. அதில் மூன்று மடிப்புகள் இருக்குமாகில் அவன் ஒரு குருவாயாவது உபாத்தியாயனாயாவது போதகாசிரியனாயாவது இருப்பான்.

10. விரிவாயும் உன்னதமாயுமுள்ள கொப்புள் ஏழைகளுக்குண்டு.

11. உன்னதமான கொப்புளையுடையவர்கள் அற்பாயுளையடைவார்கள்.

12. கொப்புளுக்குள்ளிருக்கும் மடிப்பு நேராயிருக்குமாகில் அவன் சந்தோஷத்தை யடைவான்.

13. அதற்குள்ளிருக்கும் மடிப்பு தூரமாயிருக்குமானால் அவன் ஸ்திரீகளுக்கு பிரயோஜனமற்றவனென்று தெரிந்துகொள்ள வேண்டியது.

14. எவனொருவன் மிருதுவான சமத பிடித்தமுள்ள சரியான அஷ்டங்களையும் அவைகளின் வலது பக்கத்தில் அணிவரிசையான மயிர்களையும் உடையவனோ அவன் அரசனாவான்.

15. மேலே சொல்லப்பட்ட மயிர்கள் மேலே சொல்லப்பட்ட இடத்தில் எதிர்நோக்கிப் பார்க்குமாகில் அவன் எண்ணங்கள் ஒன்றும் பிரயோஜனமாகமாட்டாது.

16. உயாமில்லாத மூலைக்காம்பையுடைய ஒருவன் அதிர்ஷ்ட சாலியாவான்.

17. உயரமாயும் சமனில்லாமல் மஞ்சள் நிறமாயும் உள்ள மூலைக்காம்பை யுடையவர்கள் தரித்திரராவார்கள்.

## மார்பின் லக்ஷணங்கள்

1. உன்னதமாயும் சதைப்பிடித்ததோடு நடுக்கமும் அதிர்ச்சியு மில்லாத மார்பையுடையவர்கள் அரசராவார்கள். இன்னும் அவர் கள் ஸாம்புமயமான சதைப்பிடித்தமுள்ள பலமான மயிர்கள் கீழ் நோக்கப்பட்டதாயும் இருப்பார்கள்.

2. ஒரு தனவந்தன் சமமான மார்பையுடையவனு யிருப்பான்.

3. இலந்தைப் பழத்தைப்போல் மார்பையுடைய ஒருவன் அதிக சக்தியுடையவனு யிருப்பான்.

4. சமனில்லாத மார்பையுடையவர்கள் தரித்திரர்களாயும் ஆயுதங்களால் கொல்லப்படுபவர்களாயு மிருப்பார்கள்.

## மார்புக்கு மேல்பாகத்திலுள்ள பூணூரவெலும்பின் லக்ஷணங்கள்

1. மேடு பள்ளமும் காடுமூாடுமான காறை எலும்பை யுடையவர்கள் தரித்திரர்களாவார்கள்.

2. உன்னதமான காறை எலும்பை யுடையவர்கள் வாழ் நாளில் பலவிதமான எண்ணங்களை அனுபவிப்பார்கள்.

3. இலந்தைப் பழத்தைப் போலுடையவர்கள் செல்வவா னவார்கள்.

4. தாழ்ந்த காறையெலும்பை யுடையவர்கள் தரித்திரராவார்கள்.

## கழுத்தின் லக்ஷணங்கள்

1. தட்டையான கழுத்தையுடையவர்கள் தரித்திரர்களாவார்கள்.

2. மானைப்போன்ற கழுத்தையுடையவர்கள் பக்தி மார்க்கமான வேத நூல்களை எழுதுபவராவார்கள்.

3. சங்கிதழ்போன்ற கழுத்தையுடையவர்கள் அரசர்களாவார்கள்.

4. நீண்ட கழுத்தையுடையவர்கள் அதிக பசியுள்ளவர்களும் பெருந்தீனி தின்பவர்களுமா யிருப்பார்கள்.

5. அமுக்கப்பட்ட கழுத்தையுடையவர்கள் தரித்திரர்களாவார்கள்.

## முதுகின் லக்ஷணங்கள்

1. மயிரில்லாமல் சமமான முதுகையுடையவர்கள் அனுகூலமான குறியையுடையவர்கள் என்றெண்ணவேண்டியது.

2. சமனில்லாததும் வேறுவிதமான முதுகையுமுடையவர்கள் பிரதிகூலக்குறி என்றெண்ணவேண்டியது.

## கைகளின் லக்ஷணங்கள்

1. சதைப்பிடித்ததோடு செம்மையாய் அமைக்கப்பட்டதும் செம்மையான பொருத்துக்களையுமுடைய கைகளையுடையவர்கள் சுபமான குறியையுடையவர்கள் என்று அறிந்து கொள்ள வேண்டியது.

2. வட்டமாயும் செம்மையான சதைப்பிடித்தோடும் முழங்கால்வரை நீண்டுகொண்டிருக்கும் கைகளையுடையவர்கள் அரசர்களாவார்கள்.

3. குட்டையான மயிர் முளைத்த கைகளையுடையவர்கள் தரித்திரராவார்கள்.

4. யானையின் துதிக்கையைப்போன்ற கைகளையுடைத்தா யிருப்பது ரொம்பவும் சிலாக்கியம்.

## கைகளின் லக்ஷணங்கள்

1. யாதொரு மனிதனுடைய கைகள் நீளமாயும், தடிப்பமாயு மிருக்கிறதோ அவன் சோம்பேறியாயும், கோழை மனதுடையவனா யும், சாதாரண மனிதனாயுமிருப்பான்.

2. யாதொரு மனிதனுடைய உள்ளங்கையானது நீளமாயும் விரல்கள் செம்மையாய் அமைக்கப்பட்டும், மிருதுவாயும் கொஞ்சம் கெட்டியாயுமிருக்குமாகில் அவன் சமர்த்தா முன்னவனாயும், ஸ்திரமில்லாத துஷ்டத்தனத்துக்கும் திருட்டுக்கும் உடன்கைதயாயு மிருப்பவனாவான்.

3. யாதொரு மனிதனுடைய உள்ளங்கையானது குழியாயும் பொருத்துக்களில் செம்மையான முடிச்சும் இருக்குமாகில் அவன் நீண்டகாலம் ஜீவித்திருப்பான். ஆனால் அது அளவுக்கு மிஞ்சிய அதிக குழியா யிருக்குமாகில் அவன் அற்பாயுளை யடைவான்.

4. யாதொரு மனிதனுடைய கைகள் அதிக குட்டையாயும் தடிப்பமாயும் முடிவில் அதிக சதைப்பிடித்தமாயும் இருக்கிறதோ அவன் திருடனாயும், பொய் சொல்லுபவனாயும் நிஜமான துஷ்ட னாயு மிருப்பான்.

5. யாதொரு மனிதனுடைய உள்ளங்கைகள் அளவுக்கு மிஞ்சின நீளமுள்ளதாயும் விரல்கள் தடிப்பமாகவும் இருக்குமாகில் அவன் கெர்வமுடையவனாயும், சோம்பேறியாயும், அஜாக்கிரதை யுள்ளவனுமா யிருப்பான்.

6. பெரியதாயும் நீளமாயும் உள்ள கைகளையுடையவர்கள் ஊக்கமுடையவர்களாயும் நல்ல நிலைமையுடையவர்களாயும் த

இராசாலிகளாயும் பெரியோர்களோடு சேருபவர்களாயும் தங்கள் சிநேகிதர்களிடத்தில் விசுவாசமுடையவர்களாயு மிருப்பார்கள்.

7. யாதொரு மனிதனுடைய கைகள் அளவுக்கு குறைவான குட்டையா யிருக்கிறதோ அவன் அதிகபேச்சு பேசுபவனாயும், பெருந்தீனி தின்பவனாயும், மற்றவர்கள் காரியங்களை அலக்ஷிப்பவனுமா யிருப்பான்.

8. யாதொரு மனிதனுடைய கையின் சிறுவிரலின் முனையானது அவன் மோதிர விரலின் மூன்றாவது பொருத்துக்குக்கு சமீபமாய் இருக்கிறதோ அவன் தன் குடும்பத்தை செம்மையாய் நடத்துபவனாய் இருப்பான். தவிர அவன் மனைவி அவனுக்கு கீழ்ப்படிந்து நடப்பவளாயும், அவனை சந்தோஷப்படுத்துவளாயு மிருப்பாள்.

9. மேலே சொன்ன சிறுவிரலின் முனை மேலே சொன்னபடி சமனில்லாமல் குறுகலா யிருக்குமாகில் அவன் மனைவி கலக்கக்காரியா யிருப்பாள்.

10. யாதொரு மனிதனுடைய முதல் விரல் அல்லது ஆள் காட்டி விரலானது இரண்டாவது அல்லது பாம்புவிரல் அவ்வளவு நீளமுள்ளதா யிருந்தால் அவன் கர்வமுடையவனாயும் விசேஷ போகப்பிரியமுள்ளவனாயும் இருப்பான்.

11. ஆனால் இவ்விரல் பாம்பு விரலைவிட சிறியதாயிருக்குமானால் அவன் கொடூரமும் கோபமுமுள்ளவனா யிருப்பான்.

12. பாம்பு விரல் அல்லது நடுவிரலின் தலைப்பாகம் கூர்மையா யிருக்குமாகில் அவன் அதிக உஷ்ணமுடையவனா யிருப்பான்.

13. இவ்விரல் கோணலாக வளைந்து இருக்குமாகில் அவன் கொலைபாதகனாவான்.

14. மூன்றாவது அல்லது மோதிர விரலானது ஆள்காட்டி விரல் அவ்வளவு நீளமுடையதா யிருந்தால் அவன் வித்தைகளில் தேர்ச்சியுடையவனாயும் பணக்காரனாயு மிருப்பான்.

15. கடைவிரல் அல்லது சிறு விரலானது அதிக நீளமாயிருந்தால் அவன் மோசக்காரனு யிருப்பான்.

16. ஷை விரல் அதிக சிறியதா யிருந்தால் அவன் ரொம்பவும் கெட்டிக்காரனு யிருப்பான்.

17, இவ்விரல் கூர்மையா யிருக்குமாகில் அவன் ரகசிய சாஸ்திரங்களை எழுதுபவனு யிருப்பான்.

18. இவ்விரலின் முனைப்பாகம் மொத்தமாயும் பருத்தும் இருந்தால் அவன் பொதுவாய் திருடனுயிருப்பான்.

19. புலியின் விரல்களைப்போன்ற விரல்களையுடையவர்கள் பலவான்களாவார்கள்.

20. அடக்கமுள்ள அல்லது அமுக்கப்பட்ட உள்ளங்கையையுடையவர்கள் தகப்பனால் சம்பாதிக்கப்பட்ட சொத்துக்களை நாசம் செய்பவரா யிருப்பார்கள்.

21. எவனொருவன் கையை கீழே தொங்கவிடும்பொழுது விரல்கள் சப்தத்தை கொடுக்கிறதோ அவன் குணம் கெட்டவனும் ஏழையாயும் இருப்பான்.

22. மேடு பள்ளமான விரல்களை யுடையவர்கள் எப்போதும் வரி கொடுப்பவர்களாவார்கள்.

23. சிவப்பு நிறமான கைகளையும் உள்ளங்கைகளையு முடையவர்கள் செல்வவானுவார்கள்.

24. வாசனையுள்ளதும் செம்மையாய் அமைக்கப்பட்டதும் பலமான உறுதியுள்ள மணிக்கட்டுகள் அரசர்களுக்குண்டு.

25. கரடுமுரடான விரல்களையும் மஞ்சள் நிறமான நகங்களையுமுடையவர்கள் தரித்திரர்களாயும் மற்ற ஜனங்களின் சம்சாரங்களிடத்தில் பழக்கமுள்ளவர்களாயு மிருப்பார்கள்.

## நகங்களின் லக்ஷணங்கள்

1. விகாரமானதும் நிறமற்ற நகங்களையுமுடையவர்கள் எப்பொழுதும் மற்றவர்களிடத்தில் சேவகம் செய்பவராவார்கள்.

2. உமியைப்போன்ற நகங்களையுடையவர்கள் நபும்சகர்களாவார்கள்.

3. காடுமுரடான உடைந்த நகங்களையுடையவர்கள் தரித்திரராவார்கள்.

4. தாமரைப்போன்ற நிறமுடைய நகங்கள் அரசர்களுக்குண்டு.

5. எவர்கள் பெருவிரல் நகத்தின் மேல்பாகத்தில் வாற்கோதுமைப்போன்ற அடையாளமுள்ள குறி இருக்கிறதோ அவர்கள் செல்வவானாவார்கள்.

6. மேலே சொன்ன அடையாளம் பெரிய விரலின் அடிப்பாகத்திலிருக்குமாகில் அவர்கள் புத்திரர்களை யுடையவராவார்கள்.

7. விசாலமான நகங்களையுடையவர்கள் கூச்சமுடையவர்களாயும் பயமுடையவர்களாயும் உதாரகுணமுடையவர்களாயுமிருப்பார்கள்.

8. நகங்களின் முனைப்பாகத்தில் வெள்ளைப் புள்ளி யிருக்குமாகில் அவர்கள் கண்ணியமுடையவர்களாயும் உலக விவகாரங்களில் நுண்மையான புத்தியை செலுத்துபவர்களாயுமிருப்பார்கள்.

9. வெண்மை நிறமான நகங்களையுடையவர்கள் அதிக வியாதியுடையவர்களாவார்கள்.

10. மேலே சொன்ன வெண்மைநிறம் ஒரு ஸ்திரீயின் கையில் இருக்குமாகில் அவள் திடசாத்திரமுள்ள மனதையுடையவளாயும் மோசக்காரியாயுமிருப்பாள்.

11. மேலே சொல்லப்பட்ட வெண்மை நிறமான நகங்களின் முடிவில் ஏதாவது புள்ளிகள் இருந்தால் அவர்கள் அற்பாயுளையும் துர்மரணத்தையு மடைவார்கள்.

12. நகங்களின் ஆரம்பத்தில் சிவப்பு கலந்த பலவித வர்ண மான புள்ளிகள் இருக்குமாகில் அவன் அதிக கோபமுடையவனும் சண்டைக்காரனுமா யிருப்பான்.

13. நகங்களின் முனை கறுப்பு நிறமாயிருந்தால் அவன் விவசாயியாவான்.

14. ஒடுக்கமான நகங்களையுடையவர்கள் கெட்ட செய்கைகளை செய்பவர்களாயும் தன் அயலார்களுக்கு கெடுதல் செய்பவர்களாயு மிருப்பார்கள்.

15. நீண்ட நகங்களையுடையவர்கள் நம்பிக்கையற்றவர்களா யும் வித்தியாசம் பாராட்டாமல் மறுபடியும் சிநேகம் செய்துக் கொள்பவர்களாயு மிருப்பார்கள்.

16. கோணலான நகங்களையுடையவர்கள் மோசக்காரர்களா யும் தைரியம் இல்லாதவர்களாயு மிருப்பார்கள்.

17. சிறியதாயும் உருண்டை வடிவமாயும் உள்ள நகங்களை யுடையவர்கள் பிடிவாதக்காரர்களாயும், கோபமுடையவர்களாயும், பகையையுடையவர்களாயு மிருப்பார்கள்.

18. நகத்தின் முனையில் வளைவாயிருக்குமாகில் அவன் பயத்தையும் கர்வத்தையு முடையவனாவான்.

19. உருண்டை வடிவமான நகங்களை யுடையவர்கள் கோப முடையவர்களா யிருந்தாலும் சீக்கிரம் அக்கோபத்தை தணித்துக் கொள்ளுவார்கள். தவிர ரகசிய சாஸ்திரங்களை விரும்புவார்கள்.

20. சதைப்பிடித்தமுள்ள நகங்களை யுடையவர்கள் சோம்பேறி களாவார்கள்.

21. வெண்மையும் கருப்புமான நகங்களையுடையவர்கள் தன் அயலார்களை மோசம் செய்பவர்களாயும் பலவிதமான வியாதியை யுடையவர்களு மாவார்கள்.

22. சிவப்பு நிறமும் புள்ளியுமுடைய நகங்களையுடையவர்கள் கோபமுடையவர்களாயும், பொதுவாய் கெட்ட செய்கைகளை செய்பவர்களாயு மிருப்பார்கள்.

23. ஒரு மனிதனுடைய நகம் நீண்டும் வளைந்தும் இருந்தால் அவன் குரூரமுள்ளவனும் வம்புக்காரனுமா யிருப்பான்.

24. அது சிறியதாயும் கறுப்பு நிறமாயுமிருந்தால் அவன் விசுவாச துரோகமுள்ளவனா யிருப்பான்.

25. அது கொஞ்சம் வளைவாயும் அகலமாயும் கறுப்புநிறமாயு மிருக்குமாகில் அவன் மானமில்லாதவனும் மோசக்காரனுமா யிருப்பான்.

26. அது நீண்டும் கொஞ்சம் வெண்மை நிறமாயுமிருந்தால் அவன் நல்ல நடத்தையுடையவனும் சத்தியவந்தனுமா யிருப்பான்.

27. அது லேசாயிருக்குமாகில் அவன் தேக அசௌகரிய முள்ளவனும் பிறரை மோசம் செய்பவனும் இருப்பான்.

28. அது உருண்டை வடிவமாயிருந்தால் அவன் இன்பசுகங்களை விரும்புபவனா யிருப்பான்.

29. யாதொரு மனிதனின் பெருவிரலின் நகத்தின் பேரில் வெள்ளைப் புள்ளி இருக்குமாகில் அவன் காமுகனாயிருப்பான்.

30. மேலே சொல்லப்பட்ட புள்ளி கறுப்பு நிறமாயிருந்தால் அவன் தொண்டுத்தனமான நடத்தையினால் நாசமடைவான்.

31. யாதொரு மனிதனுடைய முதல் விரல் அல்லது ஆள் காட்டி விரலின் நகத்தின்பேரில் வெள்ளைப்புள்ளி இருக்குமாகில் அவன் ஐசுவரியவானாயிருப்பான்.

32. அது கறுப்பு நிறமான புள்ளியாயிருந்தால் அவன் அவசியம் திரவியத்தை நாசம் செய்பவனாவான்.

33. யாதொரு மனிதனுடைய பாம்பு விரல் அல்லது நடு விரலின் நகத்தின்மேல் வெள்ளைப் புள்ளிகளிருந்தால் அவன் கடல்

யாத்திரை செய்வான். அந்தப்புள்ளி கறுப்பு நிறமாயிருந்தால் அவன் சீக்கிரம் மரணமடைவான்.

34. மூன்றாவது அல்லது மோதிர விரலில் நகத்தின்மேல் வெள்ளைப் புள்ளியிருந்தால் அவன் ஐசுவரியவானா யிருப்பான்.

35. ஷை. புள்ளி கறுப்பு நிறமாயிருந்தால் அவன் அற்பபுத்தி யுடையவனாயும், நிந்தையான பழிச்சொற்களை சம்பாதித்துக் கொள் பவனாயு மிருப்பான்.

36. சின்னவிரல் அல்லது கடைவிரலின் நகத்தின்மேல் வெள்ளைப் புள்ளியிருந்தால் அவன் சாஸ்திர ஆராய்ச்சி செய்பவனாயும், வியாபாரத்தில் திரவிய சம்பாத்தியம் செய்பவனாயும் இருப்பான்.

37. ஷை. நகத்தின்பேரில் மஞ்சள் அல்லது கறுப்புப் புள்ளி யிருக்குமாகில் அவனுக்கு மரணம் சமீபமென்றறிந்து கொள்ள வேண்டியது.

38. ஒரு மனிதனுடைய கைகளிலுள்ள நகங்கள் நீளத்தை விட அகலமா யிருக்குமாகில் அவன் அதிக கருத்துள்ளவனாயும், கேள்விகளில் சிறந்தவனாயும், தன் அதிகாரத்தை தன் அயலாரிடத் திலாவது சுற்றத்தாரிடத்திலாவது ஒப்புவித்துவிட்டு தானே ஒரு சமாசாரப் பத்திரிகை எழுதுபவனா யிருப்பான்.

39. ஒரு மனிதன் தன் நகங்களைப் பற்களினால் கடிக்கும் பழக்கமுடையவனா யிருப்பானாகில் அவன் அதிக கோபக்காரனாயும் ஓய்வில்லாத வியாகூலமுடையவனுமா யிருப்பான்.

## ஆண் குறியும், பீஜங்களும்

1. எவனொருவன் பிரமாண்டமான பெருத்த ஆண்குறியை உடையவனோ அவன் கர்வமுடையவனாயும், செல்வவானாயு மிருப்பான்.

2. எவன் ஒருவனுடைய இடது பக்கத்து பீஜம் தோன்றாம லிருக்கிறதோ அவன் மக்கட்பேரில்லாதவனாவான்.

3. காடுமூரடான பீஜக்கதையுடையவர்கள் மக்கட்பேருடையவ ராவார்கள். அவைகள் கீழே தொங்கிக்கொண்டிருக்குமாகில் அவர் கள் தரித்திரராவார்கள்.

4. ஒரு மனிதனுடைய ஆண் குறியின் தலைப்பாகம் இலந் தைப் பழத்தைதப்போ லிருக்குமாகில் அவன் சந்தோஷத்தையடை வான். அதன்மேல் தடிப்பமான நரம்புகள் இருக்குமாகில் அவனும் சந்தோஷத்தையடைவான்.

5. எவனொருவன் நீளமாயும் மேடு பள்ளமுள்ள காடு மூர டான பீஜங்களை யுடையவனோ அவன் ஏழையாயிருப்பான்.

6. எவனொருவன் அதிக நீண்ட ஆண்குறியை யுடையவனோ அவன் தரித்திரனவான்.

7. எவனொருவன் சிறிய பீஜங்களை யுடையவனோ அவன் பலமுள்ள தளகர்த்தனே யிருப்பான்.

8. எவனொருவன் ஒற்றைப் பீஜமுடையவனோ அவன் பலஹீனனவான்.

9. எவனொருவன் காடுமூரடான மேடு பள்ளமுள்ள பீஜங் களையுடையவனோ அவன் சஞ்சலமான மனைவியை அடைவான்.

10. சமமான பீஜங்களையுடைய ஒருவன் அரசனவான்.

11. எவனொருவன் சமமாயுள்ள நீளமான பீஜங்களை யுடைய வனே அவன் நூறுவயதுவரை ஜீவித்திருப்பான்.

## மணிக்கட்டின் லக்ஷணங்கள்

1. எவனொருவன் உயரமான மணிக்கட்டையுடையவனோ அவன் அநேக வருஷம் ஜீவித்திருப்பான்.

2. காடுமூரடான மணிக்கட்டையுடைய ஒருவன் பண்டிதனு வான்.

3. மஞ்சள் நிறமுடைய மணிக்கட்டையுடைய ஒருவன் ஏழையாவான்.

4. கறுப்பு நிறமானால் சந்தோஷத்தையடைவார்கள்.

## குண்டி வயிறு முதலியவைகள்

1. எவனொருவன் ஸ்திரீ போகத்தை சீக்கிரம் முடிக்கிறானோ அவன் அதிக காலம் ஜீவித்திருப்பான்.

2. எவனொருவன் அதிகநேரம் ஸ்திரீபோகம் செய்கிறானோ அவன் அற்பாயுசையடைவான்.

3. எவன் ஒருவனுக்கு பெரிய குண்டி யிருக்கிறதோ அவன் தன் திரவியத்தில் அதிக கெர்வமுடையவனா யிருப்பான்.

4. சதைப் பிடித்தமுள்ள குட்டியையுடைய ஒருவன் சந்தோஷத்தை அடைவான்.

5. எவன் ஒருவன் குரங்கைப்போன்ற இடுப்பையுடையவனோ அவன் தரித்திரனாவான்.

6. பாம்பைப்போன்ற வயிறையுடையவர் தரித்திரர்களாவார்கள்.

7. பானையைப்போலும் தாளத்தைப்போலும் வயிறையுடையவர்கள் செல்வவானாவார்கள்.

## மனிதர்களின் இந்திரிய லக்ஷணங்கள்

1. மனோரஞ்சிதமில்லாத இந்திரியத்தையுடைய ஒருவன் தரித்திரனாவான்.

2. புஷ்பத்தின் வாசனையுள்ள இந்திரியத்தையுடைய ஒருவன் அரசனாவான்.

3. தேன்போன்ற வாசனையுடைய இந்திரியத்தை யுடைய ஒருவன் அளவுக்கு மிஞ்சிய திரவியத்தை அடைவான்.

4. மீன் வாசனையுள்ள இந்திரியத்தையுடைய ஒருவன் மக்கட் பேருடையவனாவான்.

5. அது கஞ்சியைப்போலிருக்குமாகில் அவன் கன்னிகைகளையடைவான்.

6. அது மாமிசவாசனை யுடையதானால் அவன் வாழ்நாளில் பலவிதமான இன்பசுகங்களை யனுபவிப்பான்.

7. அது க்ஷாரயம் வாசனையாயிருந்தால் அவன் போதகாசிரியனாவான்.

8. அதில் சாம்பல்போன்ற வாசனையுள்ளவர்கள் தரித்திரராவார்கள்.

## ஸ்திரீ லக்ஷணங்கள்

1. சமமாயும் குளிர்ச்சியாயும் உள்ள உள்ளங்கால் உள்ளங்கைகளையும் விரல்கள் ஒன்றோடொன்று சேர்ந்து உன்னதமாயும் கூர்மையாயும் இருக்கும் ஒரு ஸ்திரீ அரசியாவாள்.

2. அவளை எவன் ஒருவன் விவாகம் செய்துகொள்ளுகிறானோ அவன் அரசனாவான்.

3. இன்னும் தாமரை மொக்கைப்போன்ற கணுக்கால்களும் மிருதுவாயும் வியர்வையில்லாத உள்ளங் கைகளும் அவைகளில் மீனைப்போலும் அங்குசம்போலும் ஜெண்டாவைப்போலும் அடையாளக்குறிகள் இருக்குமாகில் அதுவும் அரசிக்குரிய லக்ஷணங்களாகும்.

4. மேலும் அரசியினுடைய பாதங்கள் இடியைப்போலும் தாமரையைப்போலும் கொழுமையைப்போலு மிருக்கும்.

5. செம்மையானதும் உருண்டை வடிவுள்ளதும் மயிரில்லாத இடுப்பையுடைய ஸ்திரீ நல்ல லக்ஷண முடையவளாவாள்.

6. தொடைகள் யானையின் துதிக்கையைப்போலும் சமமாயும் மயிரில்லாமலும் இருப்பது ரொம்பவும் சிலாக்கியம்.

7. குண்டி விசாலமாயும் அத்திமரத்தின் இலையைப்போலும் இருப்பது சுபலக்ஷணமென் றறியவேண்டியது.

8. நெற்றியும் மார்பும் அறையும் ஆலமயுருலைப்போவிருப்பது ரொம்பவும் நல்ல லக்ஷணங்களாம்.

9. சதையுள்ள மணிக்கட்டை யுடைத்தாயிருப்பது ரொம்பவும் சிலாக்கியம்.

10. கொப்புள் ஆழமாயும் விசாலமாயும் சதைப் பிடித்துத் தோலு உள்ளே மூன்று மடிப்புடன் அமைக்கப்பட்டிருந்தால் ரொம்பவும் நல்ல லக்ஷணம்.

11. மயிரில்லாமல் சமனுயும் கூர்மையாயும் உள்ள ஸ்தனங்களை யுடையவள் பாக்கியசாலியாவாள்.

12. உதடுகள் சிவப்பு நிறமாயிருப்பது நல்ல லக்ஷணம்.

13. உருண்டை வடிவமாயும் சதைப்பிடிப்பும் உடைய உதடுகள் இருப்பது ரொம்பவும் மேன்மை.

14. குயில் சப்திப்பதுபோல பேசும் ஸ்திரீ ரொம்பவும் அதிர்ஷ்டசாலி.

15. கோண மூக்கையுடையவர்கள் அழகிய குணங்களும் ரொம்பவும் மேன்மையுடையவளுமா யிருப்பாள்.

16. நீலோற்பல புஷ்பம்போன்ற கண்களையுடைய ஸ்திரீ ரொம்பவும் நல்ல லக்ஷணமும் அதிர்ஷ்டமுமுடையவள்.

17. கண் புருவங்கள் அதிக புஷ்டியாயிராமல் உதிக்கிற சந்திரன்போலிருப்பது ரொம்பவும் மேன்மை.

18. அதிக உன்னதமாயிராததும் மயிரில்லாமலும் அதிக சதைப்பிடித்தமும் இல்லாத நெற்றியை யுடைத்தாயிருப்பது சுப லக்ஷணம்.

19. காதுகள் மிருதுவாயும் சமனாயும் இருப்பது ரொம்பவும் சிலாக்கியம்.

20. மயிர் மிருதுவாயும் கறுப்பு நிறமாயும் இருந்தால் சுப லக்ஷணம்.

21. செம்மையாய் அமைக்கப்பட்ட தலையும் உள்ளங்கால் அல்லது உள்ளங்கைகளில் குதிரையைப் போலாவது யானையைப் போலாவது மரங்களைப்போலாவது சக்கரத்தைப் போலாவது ஜெண்டாவைப்போலாவது பர்வதத்தைப்போலாவது சங்கிதழ் போலாவது குடையைப்போலாவது தாமரை புஷ்பத்தைப்போலாவது ரதத்தைப்போலாவது அங்குசத்தைப்போலாவது பலி பீடம்போலாவது புஷ்பமாலையைப்போலாவது சாமரம்போலாவது அடையாளங்கள் அல்லது குறிகளையுடைய ரேகைகளிருந்தால் அவன் அரசர்களால் சேவிக்கப்படுபவனாவான்.

22. மணிக்கட்டுகள் செம்மையாய் அமைக்கப்பட்டிருப்பது உத்தமம்.

23. கைகள் தாமரைப் புஷ்பம்போலிருப்பது மிகவும் சிலாக்கியம்.

24. உள்ளங் கைகள் அதிக குழியில்லாமலும் அதிக உன்னதமாயிராமலும் இருப்பது சுபலக்ஷணம்.

25. உள்ளங்கை வரிகள் அல்லது உள்ளங்கையில் அநேக ரேகைகளையுடைய ஸ்திரீ விதவையாகாமல் அவள் வாழ்நாள்களை யனுபவிப்பாள்.

26. யாதொரு ஸ்திரீயின் சிறிய விரல் அல்லது கால் கடை விரல் பூமியில் படாமலிருக்கிறதோ அவள் விபசாரியாவாள்.

27. யாதொரு ஸ்திரீயின் பெருவிரல் ஆள்காட்டி விரலைவிட நீளமா யிருக்கிறதோ அவளும் விபசாரியாவாள்.

28. இடுப்பில் மயிரையுடைய ஸ்திரீ கஷ்டத்தை யனுபவிப்பாள்.

29. தாம்பு மயமாயும் அதிக சதைப் பிடித்தமும் உடைய ஸ்திரீயும் கஷ்டத்தை யனுபவிப்பாள்.

30. சிறிய குண்டிகையை யுடையவளும் கஷ்டத்தை யனுபவிப்பாள்.

31. குட்டையான கழுத்தையுடைய ஒரு ஸ்திரீ தரித்திரத்தை யடைவாள்.

32. நீண்ட கழுத்தையுடைய ஸ்திரீயின் குடும்பம் நாசமடையும்.

33. வக்கிரதிருஷ்டியாய் அல்லது சரியாய் பார்க்கிற கண்களை யுடையவள் விபசாரியாவாள்.

34. யாதொரு ஸ்திரீயின் நெற்றி உயரமாயிருக்கிறதோ அவள் தன் புருஷனின் இளைய சகோதரனை நாசமடையச் செய்வாள்.

35. இடுப்பு பெரியதாயுடையவள் தன் புருஷனை நாசமடையச் செய்வாள்.

36. மயிருள்ள இடுப்பையுடைய ஒரு ஸ்திரீயானவள் புருஷனுக்கு அனுகூலமானவளல்ல.

37. வயிறு நீண்ட ஒரு ஸ்திரீ தன் புருஷனின் தகப்பனை நாசமடையச் செய்வாள்.

38. மார்பில் அல்லது ஸ்தனங்களில் மயிருடையவர்கள் கஷ்டத்தையடைவார்கள்.

39. காடுமுரடான ஈரலையுடையவர்கள் அவலக்ஷணம் என்றறிய வேண்டியது.

40. கூர்மையாயும் சமமாயிராத பற்களையுடையவர்களும் கஷ்டத்தையடைவார்கள்.

41. அது கெட்டியா யிருந்தால் அவள் தன் புருஷனை நாசமடையச் செய்வாள்.

42. பசையில்லாமல் நரம்பு மயமாயும் சமனுயிராமலும் உள்ள இரேகத்தையுடைய ஒரு ஸ்திரீ தரித்திரத்தை யனுபவிப்பாள்.

43. ஒரு ஸ்திரீயின் மேல் உதடு பெரியதாயிருந்தால் அவள் சண்டைக்காரியாயும் சீறி விழுபவளுமா யிருப்பாள்.

44. ஒரு ஸ்திரீயானவள் தன் உருவத்திலும் இரேக அங்கங்களிலும் அழகுள்ளவளாயும் உருண்டை வடிவமான பூர்ண தொடைகளுடன் ஒரு பெண் யானையின் நடையைப்போல் நடிப்பவளாயும் அழகிய கண்களுடன் ஒரு வாலிபனை மயக்கச் செய்பவளுமா யிருப்பாளாகில் அவள் அதிர்ஷ்டசாலியா யிருப்பாள்.

45. ஒரு பெண் சுகஜீவியாய் வளர்ச்சியுடைய கறுப்பு நிறமான மயிரையும் அழகிய உன்னதமாயுள்ள இரண்டு ஸ்தனங்களும் ஒன்றுக்கொன்று நெருங்கி சேர்ந்தும் அவள் பாதங்கள் சமமாய் பூமியில் படக்கூடியதாயும் மட்டுக்கடங்காத மயிரையுடையவளாயுமிருப்பாளாகில் அவள் ரொம்பவும் அதிர்ஷ்டமுடையவளாவாள்.

46. ஒரு ஸ்திரீயின் கொப்புள் நாம்பானது வளைந்து மூண்டம் போல வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்தைச் சுற்றிக் கொண்டும் அவளுடைய ரகசிய ஸ்தானமானது (அல்குள்) ஒரு அரசிலை வடிவமாயும், அவள் கணுக்கால்கள் மத்தியில் கொஞ்சம் குழியாயும், அவள் பெருவிரலின் தலைப்பாகத்தின் கீளம் கொப்புள் குழிக்கு சரியாயும் இருக்குமாகில் அவள் மெச்சத்தக்க முகச்சாயலையும் அதிர்ஷ்டமும் உடையவளா யிருப்பாள்.

47. ஒரு ஸ்திரீயானவள் தொங்குகிற வயிறையுடையவளாயும் அவ்வயிற்றின்மேல் கோதுமை அரிசி அல்லது சீர்க்காலி நிறம் போலுள்ள மயிரையுடையவளா யிருப்பாளாயில் அவள் எவ்வித நிகழினின்றும் தப்பித்து சுகமாயும் பத்திரமாயும் வாழ்வாள் என்றறிந்துசொல்ல வேண்டியது.

48. யாதொரு ஸ்திரீயின் கன்னப்பொறியின் மதூக புஷ்பம் போன்ற வர்ணத்தையுடையதாயும் அவளுடைய விழிகள் கண் புருவங்கள் மூக்கின் அடிப்பாகம்வரை நெருங்கி மயிருக்குமாகில் அவள் மெச்சத்தக்கவளும் சகலராலும் விரும்பத்தக்கவளுமா யிருப்பாள்.

49. யாதொரு ஸ்திரீயானவள் பூர்ண சந்திரனைப்போல் முகமும் சூரியன் உதிக்கும் காலத்தில் உள்ள பிரகாசத்தைப்போல் தேஜசும் விசாலமான கண்களும் உடையவளா யிருப்பாளாகில் அவள் சந்தோஷத்தை யனுபவிப்பாள்.

50. யாதொரு ஸ்திரீயானவள் செம்பு வர்ணமான நிறமுடையவளோ அவளும் சந்தோஷத்தை யனுபவிப்பாள்.

51. யாதொரு ஸ்திரீயானவள் ரொம்பவும் நீல நிறமாயிருக்கிறாளோ அவள் விபசாரத்துவமுடையவளா யிருப்பாள். அப்படியிருந்தாலும் தன் புருஷனுக்கு காரிய விஷயங்களில் மந்திரியைப் போலும், சுகானுபவங்களில் சிநேகிதியைப்போலும், தேசத்தில் தாயைப்போலும், படுக்கையில் தாசியைப்போலு மிருப்பாள்.

52. யாதொரு ஸ்திரீ சுருள் சுருளான அழகிய நீண்ட கூந்தலையும் வட்டமான முகத்தையும் ஆழமான தொப்புளையு முடையவளோ அவள் குடும்பம் அதிகரித்துக் கொண்டிருக்கும்.

53. யாதொரு ஸ்திரீயின் முகம் தாமரையமாயும் அவள் கைகள் சிவப்பாயும் இருக்குமாகில் அவள் பத்தினியா யிருப்பாள். தவிர கற்பு என்னும் தர்மத்தையே எப்பொழுதும் பிறர்களுக்கு போதித்துக் கொண்டு மிருப்பாள்.

54. யாதொரு ஸ்திரீ கரமுரடான மயிரையும் வட்ட வடிவமான கண்களையும் உடையவளோ அவள் விதவையாவாள். தவிர தன் சுற்றத்தாருக்கு எப்போதும் பிரயோஜனமற்றவளாவாள்.

55. எண்ணைப் பசையுள்ள பற்களையுடைய ஒரு ஸ்திரீ நல்ல சாப்பாட்டையுடையவளாயிருப்பாள்.

56. எண்ணைப் பசையுள்ள தோலையுடைய ஒரு ஸ்திரீ நல்ல படுக்கையையுடையவளாயிருப்பாள்.

57. எண்ணைப் பசையுள்ள பாதங்களையுடைய ஒரு ஸ்திரீ வண்டி வாகனாதிகளையுடையவளாயிருப்பாள்.

58. யாதொரு ஸ்திரீ முழங்கால் பொருத்துக்களில் போதுமான சதைப்பிடிப்பும் இல்லாமலிருக்கிறாளோ அவள் குணம் கெட்டதாயும் துர்நடத்தையுடையவளாயு மிருப்பாள்.

59. உயரமும் உன்னதமாயுள்ள ஸ்தனங்களையும் அவைகள் மயிரில்லாமல் ஒன்றோடொன்று சேர்ந்தும் பூர்ண சந்திரனைப்போல் அல்லது சூரியன் உதிக்கும்போதுள்ள பிரகாசமுடைய முகமும் தாமரை நிறம்போன்ற கண்களும், அழகிய பாதங்களும், தாமரைப் புஷ்பம்போலும் வட்ட வடிவமுமான உள்ளங்கை உள்ளங் கால்களையும் அவைகளில் வியர்வை சீக்கியாமலும் மயிரில்லாத அழகிய இடுப்பையும் ஆழமான கொப்புளையும் மயிரில்லாத மார்பையும் கண் புருவங்கள் வில்போல் வளைந்த மூக்குவளை விஸ்தரித்தும் அவள் உள்ளங்கால் உள்ளங்கைகளில் தாமரைப் புஷ்பம்போலாவது மீனைப்போலாவது அங்குசத்தைப்போலாவது அடையாளங்கள் இருக்குமாகில் அவள் ரொம்பவும் அதிர்ஷ்டமுடையவளாயும் சகல விதமான இன்பங்களை யனுபவிப்பவளுமா யிருப்பாள்.

## பல பொது லக்ஷணங்கள்

1. ஒரு மனிதன் நெற்றியில் நான்கு கோடுகள் இருந்தால் அவன் இராஜ வம்சத்தில் பிறந்தவனாயும், 95-வயது வரை ஜீவித்திருப்பான்.

2. ஒரு கோடும் இல்லாமலிருந்தால் அவன் தொண்ணூறு வயதுவரை ஜீவித்திருப்பான்.

3. சில கோடுகள் இருந்து அது இரண்டு பக்கங்களிலுமுள்ள மயிர்வரை விஸ்தரித்திருக்குமாகில் அவன் எண்பது வயதுவரை ஜீவித்திருப்பான்.

4. நெற்றியிலுள்ள கோடுகள் தாறுமாறாயிருக்குமாகில் அவன் கட்டுக்கடங்காத போக்கிரியாவான்.

5. ஐந்து ஆறு அல்லது ஏழு கோடுகள் இருந்தால் அவன் ஐம்பது வயதுக்குமேல் ஜீவித்திருப்பான்.

6. குட்டையான கோடுகள் இருந்தால் அற்பாயுசை யடைவான்.

7. குடையைப்போன்ற தலையையுடையவன் அரச வம்சத்தில் பிறப்பவனாவான்.

8. ஒருவன் மிருதுவான தலையையுடையவனானால் அவன் தகப்பன் இறந்துவிடுவான்.

9. உருண்டை வடிவமான தலையையுடையவன் செல்வவானாவான்.

10. செப்புக்குடம் போன்ற தலையை யுடையவர்கள் தரித்திரர்களாயு மிருப்பார்கள்.

11. தொப்புள் ஆழமாயிருப்பது சிலாக்கியம்.

12. நெற்றி முகம் மார்பு இவைகள் விசாலமாயிருப்பது சிலாக்கியம்.

13. கண்கள் பக்கங்கள் பற்கள் மூக்கு வாய் கழுத்தின் பின்புறம் இவைகள் உயரமா யிருப்பது மிகவும் சிலாக்கியம்.

14. உள்ளங் கைகள் கடை வாய்கள் நகங்கள் கண்களின் கடைப்பாகங்கள் பாதங்கள் நாக்கு உதடுகள் இவைகள் சிகப்பு நிறமா

யிருந்தால் அவர்கள் ரொம்பவும் அதிர்ஷ்டசாலிகளா யிருப்பார்கள். முக்கியமாய் இவ்விதமான எல்லா குறிகளும் ஒன்று சேர்ந்து அரசர்களுக்குத்தானிருக்கும்.

15. தவிர கைகளுக்கும் மார்புக்கும் கண்களுக்கும் மூக்குக்கும் உள்ள ஸ்தானம் நீளமாயிருக்கவேண்டும்.

16. வில்லின் மேல்பாகத்தைப்போன்ற உள்ளங்கைகளையும் தாமரைப் புஷ்பத்தைப்போன்ற வயிறையும் கை விரல்கள் கால் விரல்கள் ஒன்றோடொன்று சேர்ந்தும் தாமறம் போன்ற நிறத்தை யுடைய நகங்களும், ஆமையைப்போன்ற உற்சாகமான பாதங்களும், உறுதியான கணுக்கால்களும், அழகிய பாரிசங்களும் அரசர்களுக்குண்டு.

17. காடுமுரடான பாதங்களையும், பல மாதிரியான வர்ணங்களையுடைய நகங்களையும், ஒன்றோடொன்று பொருந்தாமல் அகலமாய் அமைக்கப்பட்ட விரல்களையும் உடையவர்கள் தரித்திரர்களா யிருப்பார்கள்.

18. செம்மையாய் அமைக்கப்பட்ட சிவந்த நிறத்தையுடைய பாதங்களையும், மயிரில்லாமல் சமமாய் உள்ள கணுக்கால்களையும், யானையின் துதிக்கையைப்போன்ற துடைகளையும், சமமான முழங்கால் பொருத்துக்களையும் உடையவர்கள் ராஜவம்சத்தில் தர்மசிந்தனை யுடையவர்களென் றெண்ணிக் கொள்ளவேண்டியது.

19. யாதொரு மனிதன் சுருள் சுருளான மயிரை யுடைத்தாயிருக்கிறானோ அவன் அந்நிய நாட்டில் மரண மடைவான்.

20. யாதொரு மனிதன் முழங்கால் பொருத்துக்களில் ரொம்பவும் அதிகமான சதைப்பிடித்தம் இல்லாமலிருக்கிறானோ அவன் அதிர்ஷ்டசாலியாவான்.

21. யாதொரு ஸ்திரீ முழங்கால் பொருத்துக்களில் போதுமான சதைப்பிடித்தம் இல்லாமலிருக்கிறாளோ அவள் குணம் கெட்டவளும் அற்பத்தனத்தை யுடையவளா யிருப்பாள்.

22. அவலக்ஷணமான முழங்கால் பொருத்துக்களை யுடையவன் தரித்திரனாவான்.

23. எவனொருவன் குட்டையான ஆண்குறியையுடையவனோ அவன் தனவந்தனாயும், சொல்ப சக்தியுடையவனாயும், நீண்ட ஆயுளையுடையவனுமா யிருப்பான்.

## கோபமுடைய சுபாவமுடையவர்கள்

1. ஷையார்கள் அதிக மயிரையுடையவர்களாயும் உஷ்ணமான இரேகத்தை யுடையவர்களாயும் ஒல்லியான இரேகத்தை யுடையவர்களாயு மிருப்பார்கள்.

2. ஷையார்கள் முகம் மஞ்சள் நிறமா யிருக்கும்.

3. இயற்கையாக அவர்கள் வாயினாலும் நாவினாலும் கபடமான வார்த்தைகள் சொல்வார்கள்.

4. அடிக்கடி அதிக தாகமுடையவராயிருப்பார்கள்.

5. சுறுசுறுப்பும் சலனமும் பிரயோஜனமு மில்லாத மனதை யுடையவரா யிருப்பார்கள்.

6. அவர்கள் நாடிகள் கெட்டியாயும் அடிக்கடி வேகமாய் அடித்துக்கொண்டு மிருக்கும்.

7. அவர்கள் எச்சில் கசப்பாயிருக்கும்.

8. லேசாயம் மஞ்சள் நிறமாயும் ஆவியுடன் மூத்திரம் பெய்பவரா யிருப்பார்கள்.

## இரத்தபுஷ்டியுள்ள மனிதர்களின் அடையாளங்கள்

1. ஷையார்கள் உஷ்ணமாயும் சீதளமாயும் உள்ள இரேகத்தையும் மிருதுவான சதைப்பிடித்தமும் மயிருமுள்ளவர்களா யிருப்பார்கள்.

2. ஷையார்கள் திரேகம் புதியதிறமாகத் தோன்றுவதோடு கூட ரோஜாப்பூ வர்ணமுள்ளவர்களாயும் சுறுசுறுப்புள்ளவர்களாயு மிருப்பார்கள்.

3. முகத்தில் ரத்த ஜொலி ஜொலிப்புள்ளவர்களா யிருப்பார்கள்.

4. நாடிகள் மிருதுவாயும் குளிர்ச்சியாயும் விரைவாயு மிருக்கும்.

5. மூத்திரம் சற்று சிவப்பு நியமாயிருக்கும்.

6. எச்சில் கொஞ்சம் ருசியாயிருக்கும்.

7. ஷையார்கள் எப்போதும் சிவப்பு நிறமான வஸ்துக்களையும் அழகான வஸ்துக்களையும் நாட்டியம் முதலானதுகளையும் கனவில் காண்பார்கள்.

8. மனோரம்மியமும் தாராளமுமுடைய குணங்களை யுடையவர்களா யிருப்பார்கள்.

9. அடிக்கடி சந்தோஷத்தையுடையவர்களாயும் சிரித்துக் கொண்டும் விருந்து செய்வதில் பிரியமுள்ளவர்களாயு மிருப்பார்கள்.

10. ஷையார்கள் உண்ணும் உணவுகள் அவ்வளவும் சுத்த ரத்தமாகவே மாறும்.

## கபமுள்ள மனிதருடைய குறிகள்

1. ஷையார்கள் திரேகம் குளிர்ச்சியாயும் மிருதுவாயும் கொழுத்தும் காடுமுரடாயும் மயிரில்லாதவர்களாயு மிருப்பார்கள்.

2. வெண்மை நிறமான முகங்களையும் கலாஹீனமுமுடையவர்களாயு மிருப்பார்கள்.

3. வெண்மை நிறமும் அதிகமான மூத்திரத்தை யுடையவர்களாயு மிருப்பார்கள்.

4. மிருதுவாயும் மெதுவாயும் புலனுக்கெட்டாததுமான நாடியையுடையவர்களா யிருப்பார்கள்.

5. சிறிது தாகமுடையவர்களாகவும் எப்போதும் தாகசாந்தி செய்ய பிரியமற்றவர்களாயு மிருப்பார்கள்.

6. ஏறக்குறைய வெண்மைநிறமான வஸ்துக்களையும் தண்ணீரில் ஆபத்து வருவதைப்போன்ற கனவுகளையும் காண்பார்கள்.

7. அடிக்கடி அதிக தூக்கத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

8. சக்தியற்ற மெதுவான நடையையும் வேலை செய்ய அருவருப்புள்ளவர்களாயு மிருப்பார்கள்.

9. அன்னக் குழாயிலிருந்து எப்போதும் கபம் அதிகரித்து வந்துகொண்டே யிருக்கும்.

## துக்ககரமான மனதையுடையவர்களின் லக்ஷணங்கள்

1. இவர்கள் தேகம் பிரகாசமில்லாமலும் சக்தியற்றவர்களாயும் சவத்தைப் போன்ற நிறமுடையவர்களாயு மிருப்பார்கள்.

2. எச்சில் கொஞ்சமாயும் புளிப்பாயுமிருக்கும்.

3. மூத்திரம் கொஞ்சம் நீலநிறமாயும் வெண்மை நிறமாயும் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்துக்கு ஒளிபோல விழுகிறதாயு மிருக்கும்.

4. நாடிகள் கெட்டியாயும் புலனுக் கெட்டாததாயுமிருக்கும்.

5. வெறுப்பும் நரகத்திலுள்ள பேய் பிசாசங்களைப் போலும் பயங்கரமான கறுப்பு நிறமான காட்சியையுடைய கனவுகளைக் காண்பவராவார்கள்.

6. அதிக துக்கமும் வியாகூலமும் எப்போதும் குடிகொண்டிருக்கும்.

7. எப்போதும் அதிக பயமுடையவரா யிருப்பார்கள்.

8. மாறாத நிலையையும் உறுதியையும் அவர்கள் செய்யும் காரியங்களில் உடைத்தா யிருப்பார்கள்.

## சூடுள்ள அல்லது உஷ்ணமான மூளையுடையவர்கள்

1. இயற்கையான ஹிருதயத்தையும் சிகப்புநிறமான முகமுடையவர்களாயு மிருப்பார்கள்.

2. ஷையார்களுக்கு மயிர் விரைவாக முளைக்கும்.

3. கடினமானதும் அதிக கறுப்பான மயிரையுடையவர்களாயும் தலைமயிர் சீக்கிரம் உதிர்ந்துபோகக்கூடியதாயு மிருப்பார்கள்.

## குளிர்ந்த மூளையுடையவர்கள்

1. இயற்கையாய் குளிர்ந்த மங்கலான முகத்தையுடையவரா யிருப்பார்கள்.

2. ஷையார்களுக்கு மெதுவாய் மயிர் முளைக்கும்.

3. மயிர் நேராயும் மிருதுவாயும் கொஞ்சம் மஞ்சள் வர்ணமாயு மிருக்கும்.

## உலர்ந்த மூளையுடையவர்கள்

1. கண்களில் கொஞ்சம் குறைந்த புரீஷமுடையவர்களா யிருப்பார்கள்.

2. கெட்டியான மயிரையுடையவர்களாயும் அவைகள் சீக்கிரம் உதிர்ந்துவிடக்கூடியதாயு மிருப்பார்கள்.

3. பிறர் வாக்கியங்களை சீக்கிரம் கவனித்துக்கொள்ளும் சக்தி யுடையவராவார்கள்.

4. அதிகமாகத் தூங்கமாட்டார்கள்.

## பதமான மூளையுடையவர்கள்

1. நாடி பலமாயும் அடிக்கடி மேலும் கீழுமாய் அடித்துக் கொண்டிருக்கும்.

2. பலமாயும் அடிக்கடி மூர்ச்சை இழுத்து விடுபவர்களாயு மிருப்பார்கள்.

3. மயிருள்ளதும் பெரிதானதும் கரடுமுரடான மார்பை யுடையவரா யிருப்பார்கள்.

4. தாங்கள் செய்யும் காரியங்களில் உற்சாகமுடையவரா யிருப்பார்கள்.

5. திடனான வும் கடுமையுமான கோபத்தை யுடையவர்களா யிருப்பார்கள்.

## உற்சாகமில்லாத சீதள ஹிருதயமுடையவர்கள்

1. கொஞ்சமாய் மூச்சுவாங்கி விடுபவர்களா யிருப்பார்கள்.

2. நாடிகள் சிறியதாயும் மெதுவாய் அடித்துக்கொண்டும் இருக்கும்.

3. ஸ்தனங்கள் ஒடுக்கமாயும் ஒப்பமாயும் மூடிக்கொண்டும் இருக்கும்.

4. காரியாதிகளில் மெதுவா யிருப்பார்கள்.

5. சாதாரணமாய் கொஞ்சம் கோபமுடையவர்களாயு மிருப் பார்கள்.

## நல்ல புத்தியுள்ள மனிதர்களின் குறிகள்

1. நோயும் சரியானதாயும் அதிக உயாமும் குட்டையுமில்லாமல் சமரச அளவுடன் அமைக்கப்பட்ட இரேகத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

2. அதிக சதைப்பிடித்தமா யில்லாமலும் ஒல்லியா யில்லாமலு மிருப்பார்கள்.

3. ஷையார்கள் இரேகத்திலுள்ள சதை இயற்கையாகவே மிருதுவா யிருக்கும்.

4. கெட்டியாயும் லேசாயும் இல்லாத மிருதுவான தோலை யுடையவராவார்கள்.

5. வெண்மை நிறமாயும் சிவப்பு நிறமான இளஞ்சாயம் போன்ற நிறத்தையுடையவர்களாயு மிருப்பார்கள்.

6. மயிர்கள் கெட்டியாயும் மிருதுவாயுமில்லாமல் ஒப்பமாக கோர்கவுடையதும் மஞ்சள் நிறத்துக்கும் கோதுமை வர்ணத்துக்கும் சேர்த ஒரு விதமான நிறத்தையுடையவர்களாயு மிருப்பார்கள்.

7. பெரிதும் சிறிதும் இல்லாத தலையையுடையவர்களா யிருப்பார்கள்.

8. அதிக சதைப்பிடித்தும் சதைப்பிடித்தமில்லாததுமான நடுவு நிலையுள்ள முகத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

9. எறிய நெற்றியையுடையவர்களா யிருப்பார்கள்.

10. அதிக பெரிதும் சிறிதும் இல்லாமல் உருண்டை வடிவமான சுத்தமான கண்களையுடையவர்களா யிருப்பார்கள்.

11. ரூபலாவண்யமுடையதா யிருப்பார்கள்.

12. காதுகள் குழியுள்ளதும் சித்திரம்போலுமுடையவர்களா யிருப்பார்கள்.

13. கம்பீரமான நாக்கையுடையவர்களா யிருப்பார்கள்.

14. தீவிரமும் வெறுப்புமில்லாத சப்தத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

15. அழகாயும் ஒப்பமாயுமுள்ள கழுத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

16. தொண்டைக் குறுத்தெலும்பு அசைந்துகொண்டும் தெரிந்துக்கொண்டு மிருக்கும்.

17. பின் பக்கமும் விலாப்பக்கமும் அதிக சதையிராது.

18. முதுகு சமமாயும் மெல்லியதாயு மிருக்கும்.

19. திரேக கட்டுடையவரா யிருப்பார்கள்.

20. கைகள் நீளமாயும் அழகாயும் ஒப்பமாயுமிருக்கும்.

21. விரல்கள் நீளமாயும் மத்திய அளவுள்ளதும் ஒப்பமாயும் சமமாயும் இருக்கும்.

22. பாதங்கள் அழகாயும் மிருதுவாயும் அதிக சதைப் பிடித்தமில்லாமலு மிருக்கும்.

23. சமமாயும் லேசாயும் வெண்மை நிறமாயும் சிவப்பு ரோஜாப்பூ வர்ணம் கலந்த நிறத்தையுடைய நகங்களையுடையவர்களா யிருப்பார்கள்.

24. அகலமாயும் ஒடுக்கமாயும் லேசாயும் கெட்டியாயுமுள்ள பலவித பற்களையுடையவர்களா யிருப்பார்கள்.

## மந்த புத்தியுடையவர்கள்

1. பெரியதாயும் நீளமாயுமுடைய திரேக அமைப்புள்ளவர்களா யிருப்பார்கள்.

2. கொழுப்பும் அதிக சதைப்பிடித்தமும் கலந்த திரேகமுடையவர்களா யிருப்பார்கள்.

3. சதை கெட்டியா யிருக்கும்.

4. நிறம் அதிக கறுப்பாயும் ஒளி மங்கியுமிருக்கும்.

5. தலை மிகப் பெரிதாகவாவது அல்லது சிறியதாயும் கடினமாயும் கெட்டியாயுமிருக்கும்.

6. தலையின் முன்பக்கம் குழியாயும் பின்பக்கம் உருண்டை வடிவமாயு மிருக்கும்.

7. முகம் அதிகப் பெரியதாயும் சதைப் பிடித்தமுள்ளதாயு மிருக்கும்.

8. நெற்றி பெரியதாயும் சதைப் பிடித்தமுள்ளதாயும் உருண்டைவடிவமாயு மிருக்கும்.

9. காதுகள் அதிக கெட்டியாகவும் சிறியதல்லாமலும் மேல் பாகமாக அமைக்கப்பட்டதாகவு மிருக்கும்.

10. நிலையாயும் அசைவில்லாமலும் மறைவான அல்லது ஸ்பஷ்டமில்லாத கண்களையுடையவர்களா யிருப்பார்கள்.

11. கதுப்பு அல்லது கன்னம் பெரியதாயும் சதைப் பிடித்தமுள்ளதாயு மிருக்கும்.

12. கழுத்து கெட்டியாயும் குட்டையாயும் சதைப்பிடித்தத் தோடு கொழுத்துமிருக்கும்.

13. தொண்டைக் குறுத்தெலும்பு அதன் ஸ்தானத்தில் செம்மையாய் அமைக்கப்படாததா யிருக்கும்.

14. மூதுகின் தோளெலும்பு மேலே தெரிந்துகொண்டிருக்கும்.

15. இடுப்பு அதிக சதைப்பிடித்தமா யிருக்கும்.

16. மார்பு பெரியதாயும் சதைப்பிடித்தமாயுமிருக்கும்.

17. தொடைகள் சிறியதாயும் குட்டையாயும் வளைந்து மிருக்கும்.

18. வயிறு முன்னால் தள்ளிக்கொண்டிருக்கும்.

19. கைகள் சதைப் பிடித்துள்ளதாயிருக்கும்.

## நல்ல ஞாபகமுடைய மனிதர்கள்

1. இரேகைகளின் உயர்ந்த பாகங்கள் அதிக பெரியதாயும் சிறியதாயும் இல்லாமல் சமமாய் அமைக்கப்பட்டும் கொழுப்பில்லாமல் கொஞ்சம் சதைப்பிடித்துள்ளதாயுமிருக்கும்.

2. மூளை கொஞ்சம் உலர்ந்திருக்கும்.

3. தலையின் பின்பக்கம் பிதுங்கிக்கொண்டிருக்கும்.

4. காதுகள் சாதாரணமாய் பெரியதாயிருக்கும்.

## ஞாபக சக்தியற்றவர்கள்

1. இரேகத்தின் மேல்பாகம் செம்மையாய் அமைக்கப்படாமல் சிறியதாயும் தட்டையாயு மிருக்கும்.

2. மூளை கொஞ்சம் நனைவாயிருக்கும்.

3. தலையின் பின்பக்கம் அடக்கமுடையதா யிருக்கும்.

4. காதுகள் மிகவும் பெரியதாயிருக்கும்.

## நல்ல அபிப்பிராயமுடையவர்கள்

1. கண்கள் மிதமாய் நகர்ந்து கொண்டிருக்கும்.

2. மற்றவர்களைவிட நல்ல சுபாவம் உடையவர்களா யிருப்பார்கள்.

3. பேச்சு மெதுவாயும் சலிக்காததாயும் புத்திசாலித்தனமாகவுமிருக்கும்.

## ஞானமும் யோசனையுமுடையவர்கள்

1, சிரேக அமைப்பு கொஞ்சம் சிறியதாயாவது அல்லது நடுத்தரமாயாவது யிருக்கும்.

2. தலை முன்பாகம் சாதாரணமான அளவுள்ளதாகவும் பின் பாகம் கொஞ்சம் பெரியதாகவு மிருக்கும்.

3. முகமானது அதிகப் பெரிதும் சிறிதும் இல்லாமல் கொஞ்சம் சதைப்பிடித்தமுள்ளதா யிருக்கும்.

4. நெற்றி கொஞ்சம் சம சதுரமாயும் நீளமாயும் கன்னப் பொறிகள்வரை வியாபித்து மிருக்கும்.

5. கம்பீரமான பூர்ண கண்கள் சுத்தமாய் அசைந்துகொண் டிருக்கும்.

6. நாக்கு ஒப்பமாயும் நுண்மையாயு மிருக்கும்.

7. முகத்துக்குத் தகுந்த போதுமான அளவுள்ள அழகிய மூக்கையுடையவர்களா யிருப்பார்கள்.

8. சப்தம் அதிக பெரிதும் சிறிதும் இல்லாமல் மத்தியமா யிருக்கும்.

9. கழுத்து வலதுபக்கம் கொஞ்சம் சாய்ந்தாற்போலிருக்கும்

10. கண்ட மணியானது கொஞ்சம் புடைத்துக்கொண்டிருக் கும்.

11. தொண்டைக் குறுத்தெலும்பு செம்மையாய் அமைக்கப் பட்டிருக்கும்.

12. மார்பு பெரியதா யிருக்கும்.

13. புஜங்கள் பெரியதாயும் சமமாயும் இருக்கும்.

14. கைகள் நீளமா யிருக்கும்.

15. அவர்கள் பேசும்போது இயற்கையாக விரல்கள் அசைந்து கொண்டிருக்கும்.

## அவிவேக முடையவர்கள்

1. தேகத்தின் உருவம் பெரியதாயும் இடதுபக்கம் புடைப்பாயு மிருக்கும்.

2. தலை உருண்டை வடிவமாயும் குழியாயு மிருக்கும்.

3. மயிர் சிவப்பு நிறமாயும் கழுத்துக்கு கீழ் அதிகமாக முளைத்தும் இருக்கும்.

4. முகம் அதிக பெரியதாகவும் சதைப்பிடித்தமுள்ளதாயு மிருக்கும்.

5. கண்கள் சிறியதாயும் சிவப்பு நிறமாயும் மங்கலாயும் சன்னமாக நகர்ந்துகொண்டும் மேல்பாகம் தலையினின்றும் புடைத்துக்கொண்டு மிருக்கும்.

6. காதுகள் பெரியதாயும் நீளமாயும் மேல்பாகம் நேராகவு மிருக்கும்.

7. நெற்றி அதிக சிறியதாயும் உருண்டைவடிவமாயும் உயரமாயுமிருக்கும்.

8. கன்னம் கீழே தொங்கிக்கொண்டும் சுருங்கிக்கொண்டு மிருக்கும்.

9. வாய் கூர்மையாயும் சக்தியைப்போலு மிருக்கும்.

10. உதடுகள் பெரியதாயும் புடைத்துமிருக்கும்.

11. சப்தம் சிறியதாகவும் கூர்மையாகவும் மற்றவர்களுக்கு எரிச்சலை யுண்டுபண்ணுவதாயு மிருக்கும்.

12. அடிக்கடி சக்தியில்லாத மதலைச்சொற்களைப்போல் சம்பாஷிப்பவர்களா யிருப்பார்கள்.

13. கழுத்தின் மேல்பாகம் அதிக பெரியதாயும், கீழ்ப்பாகம் சிறியதாயும் அமைக்கப்பட்டிருக்கும்.

14. தோள்களில் மயிர் முளைத்திருக்கும்.

15. இடுப்பு சதையுள்ளதா யிருக்கும்.

16. கைகள் ரொம்பவும் குட்டையாயும் அதன் பொருத்துக்கள் நீளமாயும் கெட்டியாயும் குட்டையாயு மிருக்கும்.

17. விரல்கள் குட்டையாயும் சதைப் பிடித்துமுள்ளதாயு மிருக்கும்.

18. அஜாக்கிரதையாக முன்னுக்கு குனிந்தும் முகச்சாயல் மட்டும் வெளிக்கு உயரமாகத் தோற்றும்படியான ஆச்சரியகரமான நடை நடப்பவர்களா யிருப்பார்கள்.

## தேவபக்தி யுடையவர்கள்

1. முகம் அழகியதா யிருக்கும்.

2. கண்கள் ரொம்பவும் அழகாயும் நெற்றியின் சமபாகத்துக்கு சரியாக புடைத்துக்கொண்டு மிருக்கும்.

3. இன்னும் கண்கள் குளிர்ச்சியாயும் பிரகாசமாயும் வழக்கமாக திறந்தும் தாங்கள் எண்ணின காரியங்களிலேயே சிந்தையை செலுத்தும் குணங்களையுடையவர்களா யிருப்பார்கள்.

4. சாதுவான மனிதர்களைப்போன்ற ரூபமுடையவராவார்கள்.

5. ரொம்பவும் கனமாயும் தாழ்வாயுமில்லாமல் மத்திமமான தொனியையுடையவர்களா யிருப்பார்கள்.

6. அதிகமான சிரிப்பில்லாமல் மத்திமமான புன் சிரிப்பை யுடையவர்களா யிருப்பார்கள்.

## பாவச்செய்கை யுடையவர்கள்

1. முகம் விகாரமா யிருக்கும்.

2. காதுகள் ஒடுக்கமாயும் நீண்டுமிருக்கும்.

3. உலர்ந்தும் வெண்மை நிறமாயும் வெளியில் புடைத்துக் கொண்டுமிருக்கிற கண்களையுடையவரா யிருப்பார்கள்.

4. வாய் சிறியதாயிருக்கும் ஆனாலும் வெளியில் புடைத்துக் கொண்டிருக்கும்.

5. பற்கள் நீளமாயும் வெளியே தள்ளிக்கொண்டு மிருக்கும்.

6. கீழுதடுகள் சிறியதாயும் அதன்மேல் பற்கள் தொங்கிக் கொண்டு மிருக்கும்.

7. சீக்கிரமாக சிறிய தொனியுடனும் மூக்கினால் சப்தம் வரும் போல் பேசுபவர்களாயு மிருப்பார்கள்.

8. கழுத்து பசையற்றதா யிருக்கும்.

9. முதுகு வளைந்திருக்கும்.

10. கால்களும் மேல் தோள்களும் சிறியதாயும் நுட்பமாயும் பலமில்லாததாய மிருக்கும்.

## நியாயச்செய்கை யுடையவர்கள்

1. தேகம் பொதுவாய் ஒரு அளவையுடையதாய் அமைக்கப் பட்டிருக்கும்.

2. நெற்றி நீளமாயும் கன்னப்பொறிகள் இரண்டு பக்கங்களி லும் விரிந்திருக்கும்.

3. மயிர் கருப்பாயும் கோதுமை அரிசி வர்ணம்போலும் இருளைப்போலு மிருக்கும்.

4. கண்கள் கொஞ்சம் பெரியதாயும் கம்பீரமாகவும் பிரகாசித் துக்கொண்டு மிருக்கும்.

5. ஆழ்ந்த கருத்துள்ள பேச்சையுடையவர்களா யிருப்பார்கள்.

6. புகழத்தக்க விசேஷமான மூக்சாயலை யுடையவர்களா யிருப்பார்கள்.

## அநியாயச் செய்கை யுடையவர்கள்

1. கண்கள் பசையில்லாமலும் உருண்டுகொண்டு மெதுவாய் அசையக் கூடியதும் நக்ஷத்திரங்களைப்போல் தோன்றி மறையக் கூடியதாயு மிருக்கும்.

2. அருவருப்பான ரூபத்தையுடையவர்களும் துர்ப்புத்தியுடன் பார்ப்பவர்களாயும் பயமுறச் செய்பவர்களாயு மிருப்பார்கள்.

## பலமும் பௌரிஷமும் உடையவர்கள்

1. தேகம் சரியான நிலையில் அமைக்கப்பட்டிருக்கும்.

2. தலை கொஞ்சம் பெரியதாயிருக்கும்.

3. மயிர் கோரையும் சுருளையும் இல்லாமல் மத்திமமா யிருக்கும்.

4. நெற்றி சரியான அளவுள்ள சமசதுரமா யிருக்கும்.

5. கண்கள் நீல நிறமாயாவது மஞ்சள் நிறமாயாவது சிவப்பு நிறமாயாவது திறந்து கொண்டிருக்கும்.

6. புருவங்கள் வில்லைப்போல் வளைந்திருக்கும்.

7. மூக்கு நெற்றியிலிருந்து கோணலாகவாவது கொஞ்சம் உருண்டையாகவாவது புறப்பட்டு முடிவில் சாய்ந்திருக்கும்.

8. வாய் பெரியதா யிருக்கும்.

9. மோவாய் சதுரமாயும் மயிருள்ளதாயு மிருக்கும்.

10. உதடுகள் லேசாயிருக்கும்.

11. தொனி பெரியதாகவும் சப்தித்துக்கொண்டு மிருக்கும்.

12. பலமையும் இடைவிடாமல் மூச்சுவாங்கி விடுபவர்களாயு மிருப்பார்கள்.

13. கழுத்து பெரியதாயும் கோணாயு மிருக்கும்.

14. மார்பு பெரியதாயும் பூரணமாயு மிருக்கும்.

15. முதுகின் பாகங்கள் பெரியதாயும் உறுதியாகவு மிருக்கும்.

16. தோள்கள் பெரியதாயும் அகலமாயும் விரிந்துமிருக்கும்.

17. கைகள் பெரியதாயும் பொருத்துக்கள் செம்மையாய் அமைக்கப்பட்டு மிருக்கும்.

18. தவிர கட்டி அடிவைத்து நடப்பவர்களாயும் அவர்கள் நடக்கும்போது தோள்கள் அசைந்துகொண்டு மிருக்கும்.

19. மேலே சொன்ன அடையாளமுடையவர்கள் பெருந் தன்மையுள்ள சிறந்த ஆலோசனையை யுடையவர்களாயு மிருப்பார்கள்.

## பயமுடையவர்கள் அல்லது தைரியமில்லாதவர்கள்

1. அவர்கள் தேகம் சாய்ந்தும் கீழ் நோக்கியும் அமைக்கப் பட்டிருக்கும்.

2. அற்பபுத்தியுடைய பழக்கமுடையவர்களாயும் மயிரில்லாத வர்களாயு மிருப்பார்கள்.

3. சோர்வடைந்த நடையை யுடையவர்களா யிருப்பார்கள்.

4. தேகத்திலுள்ள மயிர்கள் லேசாயும் மிருதுவாயும் இருக்கும்.

5. தேகத்தின் நிறம் வெண்மையாயாவது கருப்பாயாவது சயநிறமுடையதாயாவது இருக்கும்.

6. தலையின் முன்பாகம் அமுக்கப்பட்டும் பின்பாகம் குழியாயு மிருக்கும்.

7. மயிரின் நிறம் வெண்மையாயாவது கறுப்பு நிறமாயாவது மிருக்கும்.

8. முகம் மங்கலாயுஞ் சினைகளுடையதாயு மிருக்கும்.

9. சிறிய வாயும் உதடுகள் திறந்துமிருக்கும்,

10. மூச்சு வாங்கி விடுதல் கொஞ்சமாயும் பலஹீனமாயு மிருக்கும்.

11. தொனியானது சீக்கிரமாகவும் ஒப்பமாகவும் கொஞ்சம் மூக்கில் சப்தித்துக்கொண்டு மிருக்கும்.

12. பலமில்லாத கூர்மையான வீரியமில்லாத சம்பாஷணை யுடையவரா யிருப்பார்கள்.

13. கழுத்து நீண்டிருக்கும்.

14. நெற்றி பெரியதாயும் எலும்புள்ளதாயும் சதைப்பிடித்தமுமா யிருக்கும்.

15. மார்பு ஒப்பமாயும் ஒடுக்கமாயும் தளர்ந்துமிருக்கும்.

16. பொருத்துக்களும் கால்களும் பலமற்றதா யிருக்கும்.

17. கைகள் குட்டையா யிருக்கும்.

18. அங்கங்கள் சிறியதாயும் ஒப்பமாயு மிருக்கும்.

19. கைகள் பெரிதும் சிறிதுமா யிருக்கும்.

## வெட்கங்கெட்ட மனிதர்கள்

1. மேகத்தைப்போல் வளைந்துகொண்டிருக்கும் நெற்றி யுடையவரா யிருப்பார்கள்.

2. கண் புருவங்கள் நீளமாயிருக்கும்.

3. கண் கூசும்படியாயுள்ள பிரகாசமுடையதும் கெட்ட கண்களையுடையவரா யிருப்பார்கள்.

4. முகச்சாயல் உக்கிரமாகவும் கறுப்பாகவு மிருக்கும்.

5. மூக்கு நீளமாயும் வாய்வரை யிறங்கியு மிருக்கும்.

6. வாய் பெரியதாயும் வெளியே புடைத்துக்கொண்டும் இருக்கும்.

7. பற்கள் நீளமாயும் ஒருபக்கம் கூர்மையாயும் மற்ற பக்கம் கெட்டியா யுமிருக்கும்.

8. கழுத்து குட்டையாயும் சில வேளைகளில் செம்மையாய் அமைக்கப்படாததாயு மிருக்கும்.

9. மார்பு பெரியதாயிருக்கும்.

10. தோள்கள் ரொம்பவும் பெரியதாயிருக்கும்.

11. கைகள் நீளமாயும் பெரியதாயுமிருக்கும்.

12. விரல்கள் குட்டையாயும் கெட்டியாயுமிருக்கும்.

## தன்னடக்க முடையவர்கள்

1. மயிர் கெட்டியாயும் லேசாயுமில்லாமல் நடுவு நிலையுள்ளதா யிருக்கும்.

2. நெற்றி மேகவர்ணமும் வெளிச்சம் அல்லது பிரகாசமு மில்லாத நடுவு நிலையுள்ள வர்ணமுடையதா யிருக்கும்.

3. கண்கள் பெரியதாயும் சமமான முழிகளையுடையதாயு மிருக்கும்.

4. தொப்புளுக்கும் மார்ஸ்தனத்துக்கும் உள்ள தூரம் தொண்டைக்கும் மார்பின் அடிப்பாகத்துக்குமுள்ள தூரத்துக்கு சமமாயிருக்கும்.

## தன்னடக்கமில்லாதவர்கள்

1. முகம் குங்குமப்பூ நிறம்போலிருக்கும்.

2. கண்கள் பெரியதாயும் கொஞ்சம் குழியாயும் கொஞ்சம் சிவப்பு நிறமாயும் மறைவாயும் உட்சென்றும் இருக்கும்.

3. வாய் குழியாயும் ரொம்பவும் அவலக்ஷணமாகவுமிருக்கும்.

4. பேச்சு பெரியதாயும் பலமற்றதாயுமிருக்கும்.

5. மூச்சு வாங்கி விடுதல் சீக்கிரமாகவும் பூராவாயுமிருக்கும்.

6. கழுத்து பொருத்தும் தொண்டையின் இறைக்குழி சம்பந்தப்பட்டும் இருக்கும்.

7. வயிறு பெரியதாயும் மிருதுவாயும் கீழ்பாகம் வளைந்தும் இருக்கும்.

8. கைகள் ஒப்பமாயிருக்கும்.

9. தொப்புளுக்கும் மார்பின் அடிப்பாகத்துக்கும் உள்ள இடத்தைவிட பெரியதாயிருக்கும்.

## நம்பிக்கையற்ற மனிதர்கள்

1. தலை ரொம்பவும் சிறியதாயும் காடுமுரடாயும் பின்பக்கம் குறைவாயும் இருக்கும்.

2. நெற்றி ஒரு சிறிய மலையைப்போன்ற கூர்மையும் குழியுள்ளதாயும் இருக்கும்.

3. கண்கள் சிறியதாயும் குழியாயும் வறட்சியாயும் மங்கலாயும் ஊடுருவிப் பார்த்துக்கொண்டுமிருக்கும்.

## விசுவாசமுள்ள மனிதர்கள்

1. நெற்றி கடினமாயும் க்ஷீணிக்கக்கூடியதாயுமிருக்கும்.

2. கண் புருவங்கள் சுருக்குள்ளதாயிருக்கும்.

3. கண்கள் மத்திய பாகமாக பிரகாசித்துக்கொண்டும் வாஞ்சையுடையதாகவும் கறுப்பு நிறமாயும் இருக்கும்.

## நல்லொழுக்கமுடைய மனிதர்கள்

1. தேக அமைப்பு கொஞ்சம் நிமிர்ந்தாப்போலும் முன்னுக்கு குனிந்தாப்போலு மிருக்கும்.

2. மெதுவாயும் மத்திமமான நடையையுடையவர்களாயு மிருப்பார்கள்.

3. கண்கள் மறைவானதாயும் மேகம்போலும் அதிகமாக திறவாமலும் பூராவாக மூடாமலும் பாதி பார்த்தும் பார்க்காதது போல் இமை கொட்டுவதாயும் இருக்கும்.

4. கண் புருவங்கள் சமமாக நகர்ந்துகொண்டிருக்கும்.

5. கன்னத்துப்பின் சதை சீக்கிரம் உதித்தும் மறைந்தும் தோன்றும்.

6. சப்தமும் சம்பாஷணையும் சூக்ஷமபுத்தியும் ஆலோசனை யுள்ளதாயும் தாமதமும் நிதானமுமுடையதாயு மிருக்கும்.

7. காதுகள் ரத்தப்புஷ்டியைக்காட்டும் வர்ணமுடையதாயும் நாணத்தினாலுண்டாகும் முகச்சிவப்பைப்போலுமிருக்கும்.

## நல்லொழுக்க மில்லாதவர்கள்

1. தேகம் கோணாயும் குறுகினதாயும் இருக்கும்.

2. நிறம் சிவப்பாயிருக்கும்.

3. தலையின் முடிபாகம் கூர்மையாயும் நீளம் அதிகமாயு மிருக்கும்.

4. மயிர் சிவப்பாயிருக்கும்.

5. முகம் ரொம்ப நீளமாயாவது உருண்டை வடிவமாயாவது இருக்கும்.

6. கண்கள் விசிலாகவும் நிறந்தும் பிரகாசித்துக் கொண்டு மிருக்கும்.

7. கண்மூடி மயிருள்ளதாயும் சிவப்புநிறமாயுமிருக்கும்.

8. கண் புருவங்கள் ரொம்பவும் கீனமாயிருக்கும்.

9. பேச்சு துடுக்காகவும் மரியாதை யில்லாமலும் ஞாக்ஷணை யாகவும் இருக்கும்.

10. மூக்கு மூடையும் மழுங்காயும் நெற்றிக்கு சமீபத்தில் கோணலாயாவது வளைந்தாவது இருக்கும்.

11. மார்பு ஒப்பமாயும் உன்னதமாயுமிருக்கும்.

12. பெரு விரல்களும் நகங்களும் கோணலாயாவது வளைந்தாவது இருக்கும்.

13. அப்படிப்பட்ட ஆண் அல்லது பெண் விரைவாக அல்லது அவசரமாக எட்டி நடக்கும் நடையையுடையவர்களா யிருப்பார்கள்.

## பலமில்லாத மனிதர்கள்

1. தலை கொஞ்சம் பெரியதா யிருக்கும்.

2. தேகத்தின் உருவம் கொஞ்சம் முன்னுக்கு குனிந்தாப் போலிருக்கும்.

3. தேகத்தின் இயற்கையான அமைப்பு கொஞ்சம் உனவா யும் மிருதுவாயும் ஒப்பமாயும் கொஞ்சம் மயிருடையதாயு மிருக்கும்.

4. மயிர் சுத்தமாயும் ஒப்பமாயும் பிரகாசமாய் அல்லது கொஞ்சம் மஞ்சள் வர்ணமாயிருக்கும்.

5. கண்கள் கறுப்புநிறமா யிருக்கும்.

6. புருவங்கள் நேராயிருக்கும்.

7. சப்தம் கெட்டியாயும் மிருதுவாயும் மெதுவாயும் பெண் தன்மையைப்போலு மிருக்கும்.

8. வார்த்தைகள் சாதுவாயும் அஜாக்கிரதையாயும் தளர்ந்தும் இருக்கும்.

9. நடை மெதுவாயும் ஜாக்கிரதையில்லாமலும் இருக்கும்.

## சூரூரமும் ஆத்திரமும் பொறுமையும் தீர்ச்செய்கை முதலியன உடைய மனிதர்கள்

1. திரேகம் ஒல்லியாக நேராயிருக்கும்.

2. திரேகத்தின் நிறமும் முகச்சாயலும் சிவப்பும் மஞ்சள் நிறமாயு மிருக்கும்.

3. முகம் உருண்டை வடிவமா யிருக்கும்.

4. நெற்றி உருண்டை வடிவமாயாவது அல்லது வெள்ளாட்டின் நெற்றியைப்போல் சுருக்கமாயுமிருக்கும்.

5. கண் புருவங்கள் பின்னுக்குத்தள்ளி வளைந்து விரிவா யிருக்கும்.

6. கண்கள் பெரியதாகவும் பளுவாயும் ரத்தம்போலும் தீப் பொறிபோல் பிரகாசித்துக்கொண்டு மிருக்கும்.

7. கன்னப்பொறிகள் உயர்ந்திருக்கும்.

8. மூக்கின் கீழ்பாகம் கூர்மையா யிருக்கும்.

9. நாசித்துவாரம் பெரியதாயும் பொங்குபோலிருக்கும்.

10. வாய் அம்புக்கூடுபோலிருக்கும்.

11. பற்கள் நேராகவும் கூர்மையாகவு மிருக்கும்.

12. நாக்கு தீவிரமாய் கொஞ்ஜிப் பேசும் தன்மையுடையதா யிருக்கும்.

13. சப்தம் பெரியதாயும் சிறியதாயும் கூர்மையாயும் வார்த்தை முடிவில் கீச்சென்னும் சப்தமுடையதா யிருக்கும்.

14. வார்த்தை தீவிரமாயும் கெட்டியாயும் அற்ப விஷயத்திற்கும் கூட இரண்டு அல்லது மூன்றுதரம் திருப்பி திருப்பி சொல்பவர்களாயுமிருப்பார்கள்.

15. முகச்சாயல் அருவருப்பாயும் குரூரமுள்ளதாயுமிருக்கும்.

16. கழுத்து நீளமாயும் தடிப்பாயும் கொழுத்தும் நாடி புடைப்பாயுமிருக்கும்.

17. தொண்டை காடு முரடாயும், தொண்டைக் குழத் தெலும்பு முன்புறம் புடைத்துக் கொண்டிருக்கும்.

18. மூலைகள் பெரிதாயும் மார்பு ஒல்லியாயும் சணல் நாரைப் போன்ற நிறத்தையுடையதாயுமிருக்கும்.

19. தோள்கள் நீளமாயிருக்கும்.

20. தோள் கைப்பிடிகள் அகலமாயிருக்கும்.

21. பொருத்துக்கள் பெரியதாயும் உறுதியாயுமிருக்கும்.

22. பேசும்பொழுது விரல்கள் ஆடிக்கொண்டிருக்கும்.

23. பேசும்பொழுது பல்லை இளித்துக்கொண்டும் கடித்துக் கொண்டும் பேசுவார்கள்.

## அஜாக்கிரதையுடைய மனிதர்கள்

1. மயிர் ஒப்பமாயிருக்கும்.
2. முகம் பெரியதாயிருக்கும்.
3. நெற்றி சிறியதாயிருக்கும்.
4. கண் புருவங்கள் மூக்குவரை விஸ்தரித்திருக்கும்.
5. காதுகள் ரொம்பவும் சிறியதாயிருக்கும்.
6. கண்களின் நிறம் வெள்ளாட்டின் கண்களைப்போலிருக்கும்.
7. வாய் அவலக்ஷணமாயும் உதடுகள் பாகமாய் வகுக்கப்பட்டுமிருக்கும்.

8. உதடுகள் அதிக தடிப்பாயு மிருக்கும்.

9. பற்கள் நெருங்கியும் சமனுயுமிருக்கும்.

10. சப்தம் மூரடாயும் தீவிரமாயும் துன்மார்க்கமாயும் கூக் குரலுடனும் இருக்கும்.

11. பேச்சு தீவிரமாயும் தனியாயும் பலமற்றதாயு மிருக்கும்.

12. கழுத்து தடிப்பமாயும் கொழுத்துமிருக்கும்.

13. வயிறு சதைப்பிடித்தமாயும் மிருதுவாயும் கீழே தொங்கிக் கொண்டு மிருக்கும்.

## உண்மையுடையவர்கள்

1. முகம் சாமானிய தத்துவமுடையதா யிருக்கும்.

2. கன்னம் அடக்கமாயிருக்கும்.

3. கன்னப்பொறிான் கொஞ்சம் சதைப்பிடித்தமா யிருக்கும்.

4. மத்திமமான குரலை உடையவர்களாயு மிருப்பார்கள்.

## பொய்யுடையவர்கள்

1. தேகம் வளைந்தும் அவலக்ஷணமாயு மிருக்கும்.

2. முகம் சதைப்பிடித்தமுள்ளதா யிருக்கும்.

3. மூக்கின் நடுப்பாகம் உயரமாயிருக்கும்.

4. கண்கள் உற்சாகமாயும் நீலவர்ணமாயும் வட்டமாயுமுள்ள பொருத்துகள் சுற்றியும் இருக்கும்.

5. கண் புருவங்களின் கீழ்பாகம் தாழ்ந்திருக்கும்.

6. பேச்சு சீக்கிரமாகவும் கோப முகத்தை யுடையதாயும் கொஞ்சம் மூக்கில் சப்திப்பதுபோலு மிருக்கும்.

7. சிரிப்பு கேலியாயும் ஜயாண்டித் தன்மையுடையதா யிருக் கும்.

## கபடிகள் அல்லது மாயாவிகள்

1. முகம் கொழுத்தும் தூங்கும் முகச்சாயலையுடையதாயு மிருக்கும்.

2. நெற்றி சுருக்காயும் காடுமுரடாயுமிருக்கும்.

3. கண் புருவங்கள் வளைந்தும் கன்னப்பொறிக்கு சமீபமாய் விழும்படியாயும் இருக்கும்.

4. கண்கள் சிறியதாயும் உருண்டை வடிவமாயும் பிரகாசித்துக்கொண்டிருக்கும்.

5. சப்தம் மந்தமாயும் பேச்சு அருவருப்பாகவும் இருக்கும்.

6. நடை இப்புறமும் அப்புறமும் தள்ளிக் குதிக்கிற தன்மையா யிருக்கும்.

## முகஸ்துதி (OR) பொய் ஸ்தோத்திரம் செய்வோர்கள்

1. முகம் அநேகமாய் துக்ககரமானதாக யிருக்கும்.

2. நெற்றி சுத்த அமைதியாயாவது தெளிவாயாவது இருக்கும்.

3. கண்கள் கொஞ்சம் ஆச்சரியத்தை யுண்டுசெய்யக் கூடியதா யிருக்கும்.

4. ஷையார்கள் முகச்சாயலும் தொனியும் இனிமையாயும் ஒப்புக்கொள்ளக்கூடியதாயு மிருக்கும்.

## ஈகையும் உதாரதவமு முடையவர்கள்

1. முகம் அதிசயமாயும் சிறியதாயுமிருக்கும்.

2. கண்கள் ரொம்பவும் சிறியதாயிருக்கும்.

3. கண் புருவங்கள் கோணலில்லாமல் இருக்கும்.

4. மூதகு விசாரமாயாவது கோணலாயாவது வளைந்தாவது இருக்கும்.

5. தோள்கள் அழுத்தமில்லாமலும் மார்புபக்கமாய் சரிந்தும் இருக்கும்.

6. விரல்கள் சுருக்கமாயும் வளையாமல் கெட்டியாயும் அபிநயச் சின்னமாக உபயோகிக்கும்போது மூக்னுக்கு வளைந்தும் இருக்கும்.

7. நடக்கும்பொழுது சீக்கிரமாகவும் பலமாய் மிதிவைத்து நடப்பவர்களாயு மிருப்பார்கள்.

## நாகரீகமும் மரியாதையு முடையவர்கள்

1. நெற்றி ஒப்பமாயும் பெரியதாயும் சதைப்பிடித்தமும் மேடு பள்ளம் இல்லாமலும் இருக்கும்.

2. கண்கள் பசையாயும் பிரகாசித்துக்கொண்டும் இருக்கும்.

3. முகச்சாயல் சந்தோஷமாயும் திருப்திகரமாயும் ஆனந்தமாயும் இருக்கும்.

4. சப்தம் இன்பமாயும் சந்தோஷத்தையுடையதாயும் இருக்கும்.

5. அப்படிப்பட்டவர்கள் மெதுவாய் நடப்பார்கள்.

## இன்பமில்லாத சுபாவ முடையவர்கள்

1. தேகம் ஒல்லியாயும் இளைத்தும் இருக்கும்.

2. நெற்றி மோகத்தைப்போலும் வெடுவெடுப்பாயும் சுருக்காகவுமிருக்கும்.

3. கண்கள் கீழ்நோக்கிப் பார்க்கும் மாதிரியாயிருக்கும்.

4. நாக்கு சலனமுள்ளதா யிருக்கும்.

5. மெதுவாயும் நெருக்கமாக அடிவைத்தும் நடப்பார்கள்.

6. நடக்கும்பொழுது ரகசியமான முணுமுணுப்பை யுடையவர்களாயு மிருப்பார்கள்.

## உழைப்பாளிகள்

1. கைகள் சிறியதாயும் அதிக பெரியதா யில்லாமலும் இருக்கும்.

2. தேகத்தின் வழக்கமான நிருமாணம் வறட்சியாயும் கெட்டியாயும் இருக்கும்.

3. முகம் மெலிந்தும் அஸ்திமயமாயுமிருக்கும்.

4. கண்கள் சீக்கிரம் நடிக்கும்.

5. நாக்கு தீவிரமா யிருக்கும்.

6. அவர்கள் எட்டி அடிவைத்து விரைவாய் நடப்பார்கள்.

## சோம்பேரிகள்

1. பெரிய கட்டைத்தலையை யுடையவர்களா யிருப்பார்கள்.

2. தேக நிர்மாணம் மிருதுவாயும் கசிவாயும் இருக்கும்.

3. முகம் சதைப்பிடித்தமாயும் சுத்தமாயும் இருக்கும்.

4. நெற்றி பெரியதாயிருக்கும்.

5. கண்கள் மெதுவாய் நகர்ந்துகொண்டிருக்கும்.

6. மூக்கின் அடிப்பாகம் கனமாயிருக்கும்.

7. கன்னம் நீலவர்ணமா யிருக்கும்.

8. நாக்கு மெதுவாய்ப் பேசும்.

9. சம்பாஷணை கொஞ்சமா யிருக்கும்.

10. ஷையார்கள் நடை மெதுவாயும் கிட்ட அடிவைத்தும் விகாரமாயும் இருக்கும்.

## மந்த புத்தியும் தூங்கும் முகமுடையவர்கள்

1. தேகத்தின் மேல்பாக உறுப்புகள் கீழ்ப்பாக உறுப்புகளை விட அளவுக்கு மிஞ்சின பெரிதாயிருக்கும்.

2. இரேக அமைப்பு மந்தமுடையவர்களா யிருப்பார்கள். அதாவது சுறுசுறுப்பில்லாதவர்களா யிருப்பார்கள்.

3. தலை அதிக பெரிதாக புடைத்திருக்கும்.

4. கண்கள் புடைத்தும் கடைக்கண் பார்வையுடையதாயு மிருப்பார்கள்.

5. முகச்சாயல் மந்தமாயும் தூங்குமூஞ்சியைப்போலு மிருப்பார்கள்.

## விநயமுடையவர்கள்

1. உருவம் கோணாத வடிவமாயிருக்கும்.
2. கண்கள் ஒடுக்கமாயும் அசைவற்றதாயுமிருக்கும்.
3. சப்தம் மிதமாயிருக்கும்.
4. எப்போதும் சிரிக்கமாட்டார்கள்.
5. மெதுவாயும் கண்யமாயும் காலடிவைத்து நடப்பார்கள்.

## கெர்வமுடையவர்கள்

1. இரேக உருவம் நேராயிருக்கும்.
2. கண் புருவங்கள் வளைந்தும் வில்லைப்போன்றும் உல்லாசமாயும் இருக்கும்.
3. கண்கள் பெரியதாகவும் பிரகாசித்துக்கொண்டும் மேல் நோக்கி தலையாகத்தில் ஆடிக்கொண்டுமிருக்கும்.
4. சப்தம் நல்ல தொனியுடன் சீக்கிரமாயிருக்கும்.
5. சிரிப்பு நகைக்கத்தக்கதா யிருக்கும்.
6. கழுத்து கனமாயும் கீனமாயும் இருக்கும்.
7. தொண்டை கூர்மையாயும் விரிந்துமிருக்கும்.
8. உருவங்கள் பெரிதும் சிறியதுமாயிருக்கும்.

9. முகத்தில் செர்வமுடைய பார்வையுடையவர்களா யிருப்பார்கள்.

10. வளையாத நீண்ட கழுத்தையுடையவர்களா யிருப்பார்கள்.

11. முகம் திரானமான கோபத்தையுடையதா யிருக்கும்.

12. எச்சரிக்கையாயும் எவ்விதத்திலும் ஜாக்கிரதையுடையவர்களா யிருப்பார்கள்.

13. நடக்கும்பொழுது திரானித்தும் கொஞ்சம் நின்று நின்றும் நடப்பார்கள்.

## ரகசியமுடைய மனிதர்கள்

1. இரோகத்தின் மேல்பாகம் போதுமான அளவுள்ளதா யிருக்கும்.

2. கீழ்பாகம் மேல்பாகத்துக்கும் தணிந்து போதுமான அளவுடையதா யிருக்கும்.

3. காதுகள் மத்திமமான அளவுள்ளதாகவும் தலையில் ஒட்டி அமைக்கப்பட்டும் ஒழுங்காயு மிருக்கும்.

4. நாக்கு மெதுவாய்ப் பேசும்.

5. உதடுகள் சுருங்கி யிருக்கும்.

## இரக்கமுடைய மனிதர்கள்

1. முகம் அழகா யிருக்கும்.

2. நிறம் சற்று வெண்மையா யிருக்கும்.

3. நெற்றி சற்று கீழ்நோக்கியும் விசனகரமாயும் கூர்மையாயு மிருக்கும்.

4. கண்கள் கொழுத்திருக்கும்.

5. பிறர் சொல்வதை எப்போதும் அன்புடன் கேட்பார்கள்.

6. தவிர அடிக்கடி அவர்கள் கண்களில் கண்ணீர் வந்து கொண்டிருக்கும்.

## விரோதம் அல்லது துவேஷமுடையவர்கள்

1. கண்ணப்பொறிகள் குழியாயும் கவிழ்ந்தும் இருக்கும்.

2. கண் இமைகள் கண்ணப்பொறியுடன் கூடியும் மயிருள்ளதாயு மிருக்கும்.

3. கண்கள் சிறியதாயும் மங்கலாயு மிருக்கும்.

4. வாய் அங்கஹீனமும் அவலக்ஷணமுமா யிருக்கும்.

5. பற்கள் நீண்டிருக்கும்.

6. கைகள் குட்டையா யிருக்கும்.

## பொறுமை யுடையவர்கள்

1. தேகம் இளைத்தும் ஒல்லியாயு மிருக்கும்.

2. முகம் தெளிவா யிருக்கும்.

3. கண்கள் ஒடுக்கமாயும் நீளமாயும் இருக்கும்.

4 மேலும் சிறியதாயும் மங்கலாயும் இருக்கும்.

5. குரல் இனிமையாயும் இன்பமாயும் சந்தோஷமுடையதாயு மிருக்கும்.

6. பேச்சு தீவிரமாயும் கூர்மையாயு மிருக்கும்.

7. சிலசமயங்களில் உற்சாக முடையவர்கள்போல் பாவனையுடைய மிதமான சிரிப்பையுடையவர்களா யிருப்பார்கள்.

## அவசரமுடைய மனிதர்கள்

1. தொனி ஆரம்பத்தில் மெதுவாயும் ஆழ்ந்த கருத்துள்ளதா யிருந்தாலும் முடிவில் தீவிரமாயும் உயர்வாயும் கடினமாயும் இருக்கும்.

2. பற்கள் கொஞ்சம் அகலமாயும் நெருங்கியும் கொஞ்சம் சிறியவைகளாயும் விலகியும் இருக்கும்.

## வீரமும் பராக்கிரமும் உடையவர்கள்

1. தேக அமைப்பு நேராகவும் சரியான அளவுடையதாயு மிருக்கும்.

2. தேக நிறம் வெண்மையாயும் இரத்தஞ் சாக்கிற சிவப்பு நிறமாயு மிருக்கும்.

3. தலை மத்திமமான அளவுடன் இரண்டு பக்கமும் புடைத்து உருண்டை வடிவமா யிருக்கும்.

4. மயிர் அழகாயும் மஞ்சள் வர்ணமாயு மிருக்கும்.

5. முகம் செழுசாயும் அழகாயும் இருக்கும்.

6. நெற்றி சதுரமாயும் மத்திமமான அளவுடையதாயும் அமரிக்கையுடையதுமாய் இருக்கும்.

7. கண்கள் பெரியதாயும் கம்பீரமாயும் இருக்கும்.

8. முகச்சாயல் ஆச்சரியத்தையும் கௌரவத்தையும் உண்டாகக் கூடியதும் மெச்சத்தக்கதாயு மிருக்கும்.

9. காதுகள் மத்திமமாக பெரியதாயும் கொஞ்சம் சதுரமாயும் சீக்கிரம் கேட்கக்கூடியதா யிருக்கும்.

10. வாய் பெரியதாயும் சௌந்தரியமுள்ளதாயு மிருக்கும்.

11. பேச்சு கம்பீரமாயும் ஆழ்ந்த கருத்துள்ளதாயு மிருக்கும்.

12. போதுமான அளவுடைய சந்தோஷமும் ஆனந்தமு முடையவர்களா யிருப்பார்கள்.

13. மார்பும் தோள்களும் பெரியதா யிருக்கும்.

14. கைகள் பஹிரங்கமாயும் விஸ்தாரமாயு மிருக்கும்.

15. விரல்கள் சாமான்யமான நீளத்தையுடையதாயும் அழகாயும் பின்பக்கம் கட்டுடையதாயு மிருக்கும்.

16. மகத்துவமாயும் ஆழ்ந்த கருத்துடனும் மெதுவாயும் கால் அடிவைத்து நடப்பவர்களா யிருப்பார்கள்.

## கெட்ட மனிதர்கள்

1. தலையின் உருவம் வளைந்திருக்கும்.

2. தலை கெட்டியாயும் கூர்மையாயுமிருக்கும்.

3. மயிர் கெட்டியாயும் மிருதுவாயிராமலும் கடினமாயுமிருக்கும்.

4. முகம் கலாக்ஷீணமாயும் அவலக்ஷணமாயும் இருக்கும்.

5. நெற்றி கடினமாயும் சமனில்லாமலுமிருக்கும்.

6. காதுகள் மிகப்பெரியதாகவும் தொங்கிக்கொண்டுமிருக்கும்.

7. கண்கள் மிகப்பெரியதாயும் பசையில்லாமலும் குழியாயும் ஸ்பஷ்டமில்லாமலும் சாம்பல் நிறமான அல்லது கொஞ்சம் மஞ்சள் நிறமான வர்ணத்தையுடையதாயிருக்கும்.

8. கண் பருவங்கள் மயிரோடு சேர்ந்திருக்கும்.

9. பார்வை கூர்மையாயும் கபடமுடையதாயுமிருக்கும்.

10. முகச்சாயல் பயங்கரமாயும் மெறட்டக்கூடியதாயுமிருக்கும்.

11. கன்னம் கீனமாயும் மயிருடையதாயுமிருக்கும்.

12. வாய் கீனமாயும் அகலமாயும் மதுலைச்சொற்களைப்போல் ஆசையுண்டு செய்யக்கூடிய பேச்சை பேசுவதாயுமிருக்கும்.

13. தொனியும் பேச்சும் பயங்கரமாய் சில சமயங்களிலிருக்கும்.

14. சிரசத்தின் பின்பாகம் மயிர் அதிகமாயிருக்கும்.

15. தோள்கள் முரடாயும் உயர்ந்தும் இருக்கும்.

16. வயிறு பெரியதாயிருக்கும்.

17. கைமூட்டி குட்டையாயும் கொழுத்தும் இருக்கும்.

18. நகங்கள் கீனமாயும் ஒடுக்கமாயும் கோணலாயுமிருக்கும்.

19. விரல்கள் தடிப்பாயும் குட்டையாயும் இருக்கும்.

அனுபவ சாமுத்ரீகா லக்ஷண சாஸ்திரம் முற்றிற்று.

| நெம்பர் | | பக்கம் |
|---|---|---|
| 28 | பல பொது லக்ஷணங்கள் ... | 35 |
| 29 | கோபமுடைய சுபாவமுடையவர்கள் ... | 38 |
| 30 | இரத்தபுஷ்டியுள்ள மனிதர்கள் ... | 38 |
| 31 | கபமுள்ள மனிதர்கள் ... | 39 |
| 32 | துக்ககரமான மனதையுடையவர்கள் ... | 40 |
| 33 | சூடுள்ள மூளையுடையவர்கள் ... | 41 |
| 34 | குளிர்ந்த மூளையுடையவர்கள் ... | 41 |
| 35 | உலர்ந்த மூளையுடையவர்கள் ... | 41 |
| 36 | பதமான மூளையுடையவர்கள் ... | 42 |
| 37 | உற்சாகமில்லாத சீதள இருதயமுடையவர்கள் ... | 42 |
| 38 | நல்ல புத்தியுள்ள மனிதர்கள் ... | 43 |
| 39 | மந்த புத்தியுடையவர்கள் ... | 44 |
| 40 | நல்ல ஞாபகமுடையவர்கள் ... | 46 |
| 41 | ஞாபக சக்தியற்றவர்கள் ... | 46 |
| 42 | நல்ல அபிப்பிராயமுடையவர்கள் ... | 46 |
| 43 | ஞானமும் யோசனையுமுடையவர்கள் ... | 47 |
| 44 | அவிவேகமுடையவர்கள் ... | 48 |
| 45 | தேவபக்தியுடையவர்கள் ... | 49 |
| 46 | பாவச்செய்கையுடையவர்கள் ... | 50 |
| 47 | நியாயச்செய்கையுடையவர்கள் ... | 50 |
| 48 | அநியாயச்செய்கையுடையவர்கள் ... | 51 |
| 49 | பலமும் பௌரிஷமும் உடையவர்கள் ... | 51 |
| 50 | பயமுடையவர்கள் ... | 52 |
| 51 | வெட்கங்கெட்ட மனிதர்கள் ... | 53 |
| 52 | தன்னடக்கமுடையவர்கள் ... | 54 |
| 53 | தன்னடக்கமில்லாதவர்கள் ... | 55 |
| 54 | நம்பிக்கையற்ற மனிதர்கள் ... | 55 |
| 55 | விசுவாசமுள்ள மனிதர்கள் ... | 55 |
| 56 | நல்லொழுக்கமுடைய மனிதர்கள் ... | 56 |

| நெம்பர் | | பக்கம் |
|---|---|---|
| 57 | கல்வியொழுக்க மில்லாதவர்கள் ... | 56 |
| 58 | பலமில்லாதவர்கள் ... | 57 |
| 59 | குரோதமும் ஆத்திரமும் பொறுமையும் நேர்ச் செய்கை முதலியன உடையவர்கள் ... | 58 |
| 60 | அஜாக்கிரதை யுடையவர்கள் ... | 59 |
| 61 | உண்மை யுடையவர்கள் ... | 60 |
| 62 | பொய்யுடையவர்கள் ... | 60 |
| 63 | கபடிகள் அல்லது மாயாவிகள் ... | 61 |
| 64 | முகஸ்துதி அல்லது பொய்ஸ்தோத்திரம் செய்பவர்கள் ... | 61 |
| 65 | தயையும் உதாரத்வமு முடையவர்கள் ... | 61 |
| 66 | நாகரீகமும் மரியாதையு முடையவர்கள் ... | 62 |
| 67 | இன்ப மில்லாதவர்கள் ... | 62 |
| 68 | உழைப்பாளிகள் ... | 63 |
| 69 | சோம்பேறிகள் ... | 63 |
| 70 | மந்தபுத்தியும் [illegible] முடையவர்கள் ... | 63 |
| 71 | விநயமுடையவர்கள் ... | 64 |
| 72 | கர்வ முடையவர்கள் ... | 64 |
| 73 | ரகசிய முடையவர்கள் ... | 65 |
| 74 | இரக்க முடையவர்கள் ... | 65 |
| 75 | விரோதம் அல்லது துவேஷமுடையவர் ... | 66 |
| 76 | பொறுமை யுடையவர்கள் ... | 66 |
| 77 | அவசர முடையவர்கள் ... | 66 |
| 78 | வீரமும் பராக்கிரமமு முடையவர்கள், ... | 67 |
| 79 | கெட்ட மனிதர்கள் ... | 68 |


பொருளடக்கம் முற்றிற்று.

வாணீவிலாஸ் அச்சு நிலையம், சென்னை :—9-6-50.